தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 529

ஸ்ரீ:

# पराशरक्षेत्रमाहात्म्यम्

# பராசரக்ஷேத்திர மாகாத்மியம்

(தஞ்சை பிரசன்னவேங்கடேசப்பெருமாள்கோயில் &
தஞ்சை மாமணிக்கோயில் தலப்பெருமைகளுடன்)

பதிப்பாசிரியர்:
நியாய சிரோமணி, வேதாந்த ஆசார்ய,
நாலாயிரதிவ்யபிரபந்தவித்வான்,

முனைவர் ஆ. வீரராகவன், M.A., B.L.I.S., Phd
சம்ஸ்க்ருத பண்டிதர்
சரசுவதி மகால் நூலகம்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்
மற்றும்
ஆய்வு மையம்
தஞ்சாவூர்.

2015

பராசரக்ஷேத்திர மாகாத்மியம்



0529
T.M.S.S.M-2016

விலை : ரூ.200-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பராசரக்ஷேத்திர மாகாத்மியம் |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் ஆ. வீரராகவன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 529 |
| மொழி | : | சம்ஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2015 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : | 120 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | தலபுராணம் |
| விலை | : | ரூ. 200-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

சரசுவதி மகால நூலகம் மிகப்பழமையான சுவடி களைப் பாதுகாத்து மக்களின் பயன்பாட்டிற்கு வழங்கியுதவும் மாபெரும் கல்விக் கருவூலமாக விளங்கு கிறது. மேற்படி சுவடிகளில் கலை, கல்வி, பண்பாடு, நாகரிகம் போன்ற பொக்கிஷங்கள் பொதிந்து கிடக்கின்றன. அவற்றுள் தஞ்சை நகரின் பெருமைதனை பரக்கப்பேசுகின்ற நூல் **பராசரக்ஷேத்திர மாகாத்மியம்** (சுவடி எண்கள் B 11214/ D 10043 & B 11215/D 10047) என்பதாகும். இந்நூல் தற்பொழுது இரண்டாம் பதிப்பாக வெளிவருகின்றது.

இந்நூலில் தஞ்சையில் கோயில் கொண்டு அருள்பாலித்துவரும் பிரசன்னவேங்கடேச ஸ்வாமியின் அரிய பெருமைகளும், புராணச் செய்தியும், தஞ்சை விண்ணாற்றங்கரைத்தலப் பெருமைகளும் விரிவாக விளம்பப் பெற்றுள்ளன. புராணம், இலக்கியம், வரலாறு, சிற்பம், ஆகமம், ஆலயம் போன்ற வகையில் ஆய்வு நூலாகத் திகழ்கின்ற இந்நூலை சரசுவதி மகால் நூலக வடமொழிப்பண்டிதர் முனைவர் ஆ. வீரராகவன் அவர்கள் பல்வேறு ஆவணங்களின் அடிப்படையில் ஒப்பிட்டு பதிப்புப் பணியைத் திறம்படச் செய்து முடித்துள்ளார். அவருக்கு என்னுடைய மனமார்ந்த பாராட்டுகள்.

இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர்(பொ.) திரு. ம. சங்கரநாராயணன், B.A., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ்.சுதர்ஷன், M.A.,B.Lit.,M.L.I.S.Ph.D., அவர்களுக்கும் சரசுவதி மகால் நூலகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் இலக்கிய ஆர்வலர்களுக்கும் வரலாற்று ஆய்வாளர்களுக்கும் பெரிதும் பயன் தரும்.

**தஞ்சாவூர்**
***19-01-2015***

***டாக்டர் என். சுப்பையன்,*** இ.ஆ.ப.,
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*



# முன்னுரை

தஞ்சையில் அறிவுசார் பழம்பெருங்கருவூலம் தஞ்சை சரசுவதி மகால் நூலகம். இந்நூலகத்தில் எண்ணற்ற பல்வேறு வகை கையெழுத்துப் பிரதிகள் தொன்றுதொட்டுப் பாதுகாக்கப்பெறுகின்றன. அவ்வகையில் சம்ஸ்க்ருதத் துறையில் பதிவிடப்பெற்று விளங்குவது பராசரக்ஷேத்திர மாகாத்மியம் ஆகும்.

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திலுள்ள ஓலைச் சுவடிகள் இரண்டு பிரசன்ன வேங்கடேசர் திருக்கோயிலைக் குறித்தும்,காகிதச்சுவடிகள் மூன்று விண்ணாற்றங்கரை தஞ்சை மாமணிக்கோயில்களைப்பற்றியும் விளக்குவனவாய் 'பராசரக்ஷேத்திர மாகாத்மியம்' என்ற பெயரிலேயே அமைந்து விளங்குகின்றன. இருப்பினும் இப்பதிப்பிற்கு மூலநூலாக தெலுங்கு எழுத்தில் ஓலைச்சுவடியாக எழுதப்பெற்ற ஸ்ரீபிரசன்ன வேங்கடேசர் திருக்கோயிலைக் குறித்த சுவடியே எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

பராசரக்ஷேத்திரம்

ஸ்ரீபிரசன்ன வேங்கடேசர் தலபுராணம் கூறும் இந்நூலில் "காவிரியின் வடகரையில் பஞ்சநதேஸ்வரரின் ஆலயமும், அவ்வாலயத்திலிருந்து தென்திசையில் 2 குரோசத் (4 ½ மைல்) தொலைவில் வசிஷ்டேச்வரத் திருத்தலம் அதன் தென்மேற்கில் பராசரக்ஷேத்திரம் உள்ளது" என இத்தலத்தின் அமைவிடம் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஒருகாலத்தில் தஞ்சையின் மேற்குப்பகுதி இராஜாகோரி அமைந்துள்ள வம்புலாஞ்சோலைப் பகுதியில் வைஷ்ணவ சிவாலயங்கள் அமைந்திருந்தன. மராத்திய மன்னர்களின் காலத்தில் அவை அங்கிருந்து வெவ்வேறு இடத்திற்கு பெயர்க்கப்பட்டன. அவ்வாறு இடம்பெயர்ந்து நிறுவப் பெற்றமைக்கான ஆதாரங்களும் கிட்டியுள்ளன. தேவாலயங்கள் தஞ்சையின் மேற்கு பகுதியிலிருந்து இடம் பெயர்க்கப்பட்ட போதிலும் "பராசரக்ஷேத்திரம்" என்ற இடப் பெயர் மட்டும் பின்னாளிலும் மாற்றமடையாது அப்படியே பயன்படுத்தி வந்தமை "ஸ்வஸ்தி ஸ்ரீ ந்ருபசாலிவாகன சகம் 1789 (+78=1867 A.D. ) ... பிரபவ நாம ஸம்வத்ஸர ஆஷாட (கிருஷ்ணபக்ஷ) வார சிரவண நக்ஷத்ரீ புரந்தர அண்ணாகா சிவராம் யாஹீ ஆச்ரமாதிகார கரூந தத்தினே பிரதோஷஸமஈ அஸ்மின் "மணிமுக்தாதீரே பராசரக்ஷேத்ரே" பிரம்மஸமாதிராஸால அராதி. ஸ்ரீரஸ்து" என்கிற தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள் நூலிலமைந்த சிவராம் பள்ளிப்படைக் கல்வெட்டால் அறிய முடிகிறது. (இது இந்நூலாசிரியரால் ஆய்ந்தளிக்கப் பெற்றுள்ளது)

பராசர முனிவர் தவம் மேற்கொண்டு வேங்கடேசர் அவருக்குப் பிரசன்னர் (காட்சி கொடுத்தவர்) ஆனார். ஆதலால் பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் கோயிலுக்கும் 'பராசரக்ஷேத்திரம்' என்ற பெயருண்டு. தஞ்சை மாமணிக் கோயில் (விண்ணாற்றங்கரை) எம்பெருமான்கள் பராசர முனிவருக்குக் காட்சிதந்ததாலும், பராசரமுனிவர் தஞ்சை-விண்ணாற்றங்கரை நீலமேகப்பெருமாள் கோயில் கருவறையின் உள்ளே எழுந்தருளியிருப்பதாலும், இக்கோயில்கள் தஞ்சையின் மேற்கு பகுதியிலிருந்து இடம் பெயர்ந்து வடக்கே நிறுவப்பெற்றுள்ளதாலும் விண்ணாற்றங் கரைக்குப் பராசர

க்ஷேத்திரம் என்பது பெயர்* ஸ்ரீபிரஸன்னவேங்கடேசர் தற்போது எழுந்தருளியுள்ள பகுதியும், தஞ்சை மாமணிக் கோயில்கள் முன்பு அமைந்திருந்த பகுதியும் முன்னர் குறிப்பிட்டது போல் வசிஷ்டேச்வரத்திற்கு (கரந்தைப் பகுதிக்கு) தென்மேற்கில்தான் என்பது குறிப்பிடத்தக்கது. பிரஸன்ன வேங்கடேசரின் தலபுராணத்தை காலவர், வியாஸரின் மூலமாக வெளியிட்டதால் இத்தலத்திற்கு ஆதிகாலவக்ஷேத்திரம் என்பது மற்றொரு பெயர். இத்தலத்திற்கு தஞ்சாபுரம் எனப்பெயர் வரக் காரணமாய் தஞ்சாசுரனுடன் எம்பெருமான் போர் புரிதலும், தஞ்சாசுரனின் வேண்டுகோளால் இவ்வூர் தஞ்சாபுரம் என அழைக்கப் படுவதும், பிரஸன்னவேங்கடேசர், நரசிம்மர், நீலமேகர், அம்பாள் ஆகியோரை அப்படியே இத்தலத்தில் எழுந்தருளி அருள்பாலிக்க பராசரர் வேண்டுதலும், இந்நூலான பராசரக்ஷேத்திர மாகாத்மியத்தில் கண்டு கொள்ளலாம்.

ஸ்ரீபிரசன்னவேங்கடேசர்

பராசரக்ஷேத்திர மாகாத்மியம் கூறும் ஸ்ரீபிரசன்ன வேங்கடேசரின் ஆலயம் தஞ்சை அய்யன் கடைவீதிக்கு

---

* Cholachampu - Preface P. No. 849

**The Tanjore city acording to this puranic Version, developed from the banks of the Vennar** about two miles to the North of the present city, around the temple of Tanjeswara and Anandavalli, which can be seen even now very near the Vennar banks. This temple has been in existence according to this version from before the first Tanjore chola who renovated it. **The place had been called Parasara Kshetra, from sage Parasara** who installed the deities near his hermitage. Tanjasura of Salmali island who has driven by famine to the fertile valley of Tanjore, disturbed its peace. Parasara invoked the aid of Mahadeva and Anandavalli for the destraction of Tanja who accordingly was killed in battle by Anandavalli and her hosts. The place was called Tanjapuri from that time in accordance with the boon granted to Tanjasura at his death. Eight manifestations of Sakti were installed to guard the city and they are still worshipped in Tanjore. The best known of the eight is Renuka called Ellaiamman in Tamil, Who adorns the street in Tanjore called after her.

அடுத்தாற்போல் உள்ளது. எம்பெருமான் உபய நாச்சியாருடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்தோடு சேவை சாதிக்கிறார். ஆதி பிரதிஷ்டை தாருவாக அமைந்து, சிறிதே பின்னப்பட்டதால் புதிதாகச் சிலை நிர்மாணம் செய்து ஸ்தாபிக்க நினைத்தபோது கனவின் மூலமாய் அறிந்த செய்தியின்பால் அய்யன் குளத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டு நிறுவப்பட்டவர்தான் தற்போது கருவரையினுள் காட்சிதரும் ஸ்ரீபிரசன்ன வேங்கடேசர். புதிதாகச் செய்யப்பெற்ற சிலை கோயிலுள்ளே இருப்பதையும் நாம் பார்க்கலாம்.[1]

## கோயிலமைப்பு

ஸ்ரீபிரசன்னவேங்கடேசப்பெருமாள் ஆலயம் பூமிமட்டத்திற்கு மேல் உன்னத மேற்பரப்பில் சிற்சில படிக்கட்டுகளுடன் அமைந்துள்ளதால் திருமலையில் அருள்பாலிக்கும் மலையப்ப ஸ்வாமியையும். இக்கோயிலின் அருகே-

> குடதிசை முடியை வைத்து குணதிசைபாதம் நீட்டி
> வடதிசை பின்புகாட்டி தென்திசை இலங்கைநோக்கி
>
> (திருமாலை-19)

என்கிற திவ்யபிரபந்தபாசுரப்படி அமைந்த பள்ளிகொண்ட பெருமாளைக் காண்கின்ற போது அரங்கநகர் அப்பனையும், திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜனையும் நினைப்பூட்டுவதாய் விளங்குகின்றது.

## வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சியில் வேங்கடேசர்

தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சியில்[2] குறிசொல்கின்ற பெண்மணி தன்னுடைய தொழில் ஈதென்று விவரிக்கும்போது-

---

1. தஞ்சைத்திருக்கோயில்கள், ப. எண்-87

2. Tanjore Sarasvati Mahal Publication P. No. 9 & 2

திருவரங்கம் குடந்தை கச்சி சிறுபுலியூர் உறையூர்
சீராம விண்ணகரம் சேறை மழைபெய்யும்
அரிமேயவிண்ணகரம் ஆதனூர் அழுந்தூர்
ஆய்ப்பாடி வடமதுரை அத்திகிரிப் புலியூர்
பரமேயவிண்ணகரம் பாவநாசம் புவனம்
காம பாதகன்(பார்த்தன்?)பள்ளி பதரிகாசிரமம்
குருகூர்வயல்களெங்கும் கொக்குகளைப்பிடித்து
கூறி விற்போம் தஞ்சை குஞ்சரவன் நாட்டில்

என்கிற எட்டாம் பாட்டில் பற்பல வைணவத்திவ்ய தேசங்களைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். அப்படியே இக்குறவஞ்சிக்கு முன் நடக்க குஞ்சரவன் நாடான தஞ்சை தலத்தெம்பெருமான்களையும் -

கோபாலப்பெருமாள் சிங்கப்பெருமாள் மணிகண்டப்பெருமாள்
மின்மலை வேங்கடேசர் ரகுநாதப்பெருமாள் ஆதிகேசவப்பெருமாள்
முகப்பில்ஆறுமுகப்பெருமாள்கருடங்கோட்டை
மேலகோதண்டப்பெருமாள்
தாழியான்நீலமேகன்விதனமேபோக்கும்தஞ்சைநரசிங்கப்பெருமாள்
ஏனையோரும்தஞ்சைவெள்ளைப்பிள்ளையார்குறவஞ்சிக்கு
முன்னடக்கவேணும்

என்றழைப்பதாய் அமைத்திருக்கின்றார்.

பராசரக்ஷேத்திரமாகாத்மியத்தில் குறிப்பிட்டுள்ள பிரசன்னவேங்கடேசர் மின்மலை வேங்கடேசர் என்றும், தஞ்சைமாமணிக்கோயில் எம்பெருமான்கள் சிங்கப்பெருமாள், மணிகண்டப்பெருமாள், நீலமேகன் எனவும், தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சியில் குறிக்கப் பெற்றுள்ளனர்.

மேலும், வடமொழியில் 'யதோக்தகாரி' என்பது தமிழில் சொன்னவண்ணம்செய்தபெருமாள் என மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. தமிழ்ப்பாடலுக்கு எம்பெருமான்

செவிசாய்த்தான் என்பதால் 'தமிழறிந்தபெருமாள்' என்றும் கூறுவர். அச்சொல்லே தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சியில் "வழக்கறிந்தபெருமாள் தன் வடமலையில் வாழ்வோம்" என்பதால் குறி சொல்லும் குறத்தியின் கூற்றாகக் காணப்படுகிறது. வடவேங்கடவனே இங்கு பிரசன்ன வேங்கடேசராகி பராசர க்ஷேத்திரமாகாத்மியத்தின் நாயகராய்த் திகழ்பவர். இக்கோயிலைக் குறித்த செவிவழிச்செய்தி ஒன்றுண்டு. தஞ்சைபிரசன்னவேங்கடேசப்பெருமாள் கோயிலின் தென்பகுதியில் உள்ளவர் ஆதிகேசவப் பெருமாள். ஒரு சமயம் ஆதிகேசவரின் பூசைக்காக சிறந்த நறுமணங்கொண்ட புஷ்பங்களை அரசர் அனுப்பியிருந்தார். அர்ச்சகரும் அதனைத் தன் காமக்கிழத்திக்கு அளித்து விடுகிறார். வழிபாட்டின் பொருட்டு புஷ்பமளித்த அரசனும் இறைவனைத் தொழ வருகின்றார். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்த அர்ச்சகர், தலையில் சூடிய புஷ்பத்தை அப்பெண்மணியிடமிருந்து வாங்கி அரசனுக்கு அளிக்கின்றார். அதில் கேசம் இருப்பது கண்டு அரசன் வியப்புற்று வினவ, அர்ச்சகர், 'எம்பெருமானுக்கே கேசம் உண்டு' என மொழிகின்றார். சரி ! அப்படியானால் 'மீண்டும் வந்து பார்ப்போம்' என்று கூறிச்சென்றார் அரசர். மறுமுறை அரசர் வந்து பார்க்க எம்பெருமானுக்குக் கேசமிருந்ததால் கேசர் ஆகி, ஆதிகேசவராய் அருள்பாலிக்கின்றார். இதனால் அர்ச்சகர் சொன்னவண்ணம் செய்த பெருமாள் வழக்கறிந்த பெருமாள் ஆதிகேசவர் (ஸ்ரீபிரசன்ன வேங்கடேசர்) என்பதும்* குறிப்பிடத்தக்கது. தஞ்சை சரசுவதி மகால் நூலகம் வெளியிட்டுள்ள அனங்கவிஜயபாணத்தின் காட்சி மேடையாக அமைந்தது ஸ்ரீ பிரசன்னவேங்கடேசர் திருக்கோயில். ஆதலால் அந்நூலிலும் பிரசன்ன வேங்கடேசர் கோயிற்குறிப்புகள் காணக்கிடைக்கின்றன.

---

* வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சி - தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு.

பதிப்புமுறை

தஞ்சை பிரசன்ன வேங்கடேசப்பெருமாள் கோயிலைக் குறித்து தெலுங்கு எழுத்தில் எழுதப்பெற்ற பராசரக்ஷேத்திர மாகாத்மியத்தினை முயன்று படியெடுத்து, இருசுவடிகள் கிடைத்ததால் ஒன்றோடொன்றினை ஒப்பாய்வு செய்து, பதிப்புக்கு ஏற்றவாறு அமைத்து, நான்கு அத்தியாயங்கள் உள்ள அந்நூலைத் தமிழ்க் கதைச்சுருக்கமும் கூடியதாய்ப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. தேவநாகரி எழுத்தில் மூன்று பிரதிகளில் எழுதப்பெற்று காகிதச்சுவடி (B.1866/D.10357 & B.1867/D.10359 & B.1868/D.10358) யாகத் திகழ்பவை தஞ்சை மற்றும் விண்ணாற்றங்கரைப் பராசரக்ஷேத்திர மாகாத்மியம் ஆகும்.

பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பராசரக்ஷேத்திர (பிரசன்ன வேங்கடேசப்பெருமாள்) மாகாத்மியத்திற்குத் தொடர்புடையனவற்றை அம்மூன்று காகிதச் சுவடி களிலிருந்து ஆய்ந்தெடுத்து உரிய இடத்தில் பொருத்தியும், விண்ணாற்றங்கரைப் பராசரக்ஷேத்திரம் பற்றிய பல்வேறு வகைச் செய்திகளைக் கோர்வையாக்கி பராசரக்ஷேத்திரம் - ஓர் ஆய்வு என்ற பெயரில் பிற்சேர்க்கை ஒன்றினை அமைத்தலும் இத்துடன் மேற்கொள்ளப்பட்டுள்ளது. பிரசன்ன வேங்கடேச அஷ்டோத்தரசதநாமஸ்தோத்திரமும் நாமாவளியும் பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

பதிப்பிற்குதவிய சுவடிகள்

இந்நூலின் மூலச்சுவடி சரசுவதி மகால் நூலக சம்ஸ்க்ருதத்துறையில் (A) B.11214/D.10046 & (B) B.11215/D.10047 ஆகிய எண்களில் பதிவிடப்பெற்றுள்ளன. 17 ஓலைகளில் 250 கிரந்தங்களுடன் காணப்பெறும் இச்சுவடி முழுமையற்றது எனக்குறிப்பிடப்பெற்றுள்ளது. ஆனால் A எனக் குறிப்பிட்ட சுவடி நூலில் மட்டும் இறுதியில் சுவடி எழுத்தாளர், "சிவகாமசுந்தரீ ஸஹாயம்" என எழுதியுள்ளார். இதனையும், கதையோட்டத்தினையும் கருத்திற்கொண்டு நோக்குங்கால்

நூலாசிரியர் மொத்தம் நான்கு அத்யாயங்களில் பராசர க்ஷேத்திரத்தின் பெருமைதனை சுருக்கி வரைந்து முழுமையான சுவடியைப் படைத்தளித்துள்ளார் என்பது புலனாகிறது.

நன்றியுரை

இந்நூலைப் பதிப்பிக்க ஆணை வழங்கிய மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் தஞ்சை சரசுவதி மகால் நூலக இயக்குநர் மதிப்பிற்குரிய திரு. எம். எஸ். சண்முகம், இ. ஆ. ப., அவர்களுக்கும், நூலக நிர்வாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு சாமி. சிவஞானம் அவர்களுக்கும் என்னுடைய நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல் வெளிவருவதில் எனக்கு ஊக்கமளித்து பல்வேறு வகைகளில் துணைநின்ற ஸ்ரீந்ருஸிம்மப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகா, ஸ்ரீகாஞ்சீபேரருளாளன், கடுக்கலூர் திருமாலடியார் அருள்நெறிமன்றமலர், திருக்கோயில் போன்ற ஆன்மீகமாதஇதழ்களுக்கும், இதழ்ப்பணியாளர் களுக்கும், தஞ்சை அரண்மனை தேவஸ்தான அறங்காவலர் மற்றும் திருக்கோயில் பணியாளர்களுக்கும், இப்பெரும் பணியில் உதவி புரிந்த ஆன்மீக அன்பர்கள் Dr. B. M. சுந்தரம், Dr. S. கோதண்டராமன், இதயநோய் நிபுணர் Dr. K.R. ஸ்ரீநிவாஸன், கல்யாணபுரம் நாதமுனி R. ஸ்ரீநிவாஸன், விண்ணாற்றங்கரை திரு. K. ஆராவமுதன், திரு. K. விச்வநாதன், உறுதிக்கோட்டை திரு. சுந்தரகிருஷ்ணன் திரு. மாதவசிம்மன், திருவையாறு இசைக்கல்லூரி முன்னாள் முதல்வர் இராம. கௌசல்யா ஆகியோருக்கும் வைகுண்டவாசி திரு. சௌந்திரராஜன் (அறநிலயத்துறை முன்னாள் பணியாளர்) அவர்களுக்கும், அவரது குடும்பத்தார் போன்றோர்களுக்கும், என்னுடன் பணியாற்றுகின்றவர்களான Dr. P. பெருமாள், Dr. S. சுதர்ஷன், திருமதி S. இராஜலெக்ஷ்மி, திரு. M. மணிமாறன், திரு. செந்தில், திரு. K. பாலசுப்ரமணியம், திருமதி ராஜஸ்ரீ

ஆகிய சரசுவதி மகால் ஊழியர்களுக்கும் என்னுடைய உளமார்ந்த நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் நன்கு வெளிவரத்துணைபுரிந்த சரசுவதி மகால் நூலக கணினித்துறையினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்து மனம் மகிழ்கின்றேன்.

பயன்கள்

இந்நூல் தஞ்சையைக்குறித்து ஆய்வுசெய்வோருக்கும், இலக்கிய ஆர்வலர்களுக்கும், தலவரலாற்று ஆராய்ச்சியாளர்களுக்கும், சமஸ்க்ருத்துறை சார்ந்தோருக்கும், வரலாற்றுத் துறை வல்லுநர்களுக்கும் பெரிதும் பயன் தரும்.

தஞ்சாவூர்
*13-7-2009*

முனைவர் **ஆ. வீரராகவன்,**
சம்ஸ்க்ருதப் பண்டிதர்,
சரசுவதி மகால் நூலகம்.



# विषयसूचिका

## பொருளடக்கம்





## பராசரக்ஷேத்ர மாகாத்மியம்
## முதல் அத்யாயக் கதைச்சுருக்கம்

காலவர் தன்னுடைய தவம் சித்திபெறத் தகுதியான க்ஷேத்திரம் எதுவென விரித்துரைக்க வியாஸரிடம் வேண்டுகிறார். காலவரின் விருப்பத்தை ஏற்று வியாஸர் விவரிக்கத் தொடங்குகின்றார்.

'பஞ்சநதம்' (திருவையாறு) எனும் சிறந்த சிவத்தலம் கௌதமர் போன்ற முனிவர்களால் வணங்கப்பெற்றதாய் காவிரியாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. அத்தலத்தில் நின்றும் தென்பகுதியில் 2 குரோசத் தொலைவில் பிரசன்ன வேங்கடேசப்பெருமாள் கோயில் காணப்படுகிறது. ஸ்ரீவிருஷாத்ரி நிவாஸியான பிரசன்னவேங்கடேசன் அருள்பாலிக்கும் தலத்திற்கு 'பராசரக்ஷேத்திரம்' என்பது பெயர். இதற்கு பராசரக்ஷேத்திரம் என்று பெயர்வர ஒரு காரணமுண்டு. என்னுடைய கொள்ளுத்தாத்தா வசிஷ்டர் இங்கே தவம் மேற்கொண்டு தவப்பயனாய் வேங்கடவனைக் கண்டார். தஞ்சாபுரம் என்று இத்தலத்திற்கு மற்றொரு பெயரும் கூறப்படுகிறது. வசிஷ்ட மகரிஷியின் பௌத்திரர் பராசரர். அவரே என்னுடைய (வியாஸருடைய) தகப்பனார் ஆவார். பராசரர் யக்ஞம், தானம், தவம் முதலியவற்றால் வேங்கடவனைப் பூசித்து வந்தார். பராசர மகரிஷியால் பூசிக்கப்பட்டு வந்த இத்தலம் பராசர க்ஷேத்திரம் ஆயிற்று. இந்த க்ஷேத்திரத்தில் மேற்கொள்ளும் தவம், பூசை போன்றவை பயன்தரக்கூடியனவாய் அமைகின்றது என்பதாக க்ஷேத்திரப்பெருமையுரைக்கும் (42ம் அத்யாயமெனும்) முதல் அத்யாயக் கதைச்சுருக்கம் இனிது முடிவுற்றது.

********

## இரண்டாம் அத்யாயக் கதைச்சுருக்கம்

இரண்டாம் அத்யாயமாகிற இதில் வசிஷ்டர் புத்திரசோகம் நீங்கப்பெறுதலையும், தஞ்சாபுரம் என்று பராசரக்ஷேத்திரத்திற்கு எவ்வாறு பெயர் வந்தது ? என்பதை யெல்லாம் விவரிக்கக்கேட்ட காலவருக்கு, வியாஸர் கீழ்வருமாறு பதிலுரைக்கின்றார்.

ஒரு சமயம் விச்வாமித்ரர் முன்விரோதம் காரணமாக வசிஷ்டரின் புதல்வரான சக்தியைக் கொல்ல அரக்கர்களை அனுப்பினார். சக்தி மாண்டுவிட புத்திரவியோகாக்னியால் தஹிக்கப்படவராய் வசிஷ்டர், சைத்யோபகாரத்தாலும் அவரது மனம் குளிரவில்லை. சோகத்திலிருந்து மீளாத வசிஷ்டர் மலையொன்றின் உச்சியை அடைந்து அங்கிருந்து கீழே குதித்தார். அப்போது பூதலமே அவருக்கு பூப்படுக்கையாக மாறியது. குலம் வளர வழியின்றி வருந்தினார் அவர். செய்வதறியாமல் திசையெங்கும் சுற்றித் திரிந்தார். இறுதியில் இத்தலம் வந்துசேர்ந்தார். வசிஷ்டரின் புத்திர சோகத்தை அகற்ற அவரைக்கொண்டே சிவாலயம் ஒன்றினை நிறுவச்செய்து வசிஷ்டேச்வரம் எனப் பெயர் பெறச்செய்தார் இறைவன். பாபக் கழிவிடைக்காக நீர்நிலை யொன்றையும் அமைக்கச் செய்து "வசிஷ்ட புஷ்கரிணீ" என திருநாமமிடச் செய்தார். நீராட்டத்திலும் இறை வழிபாட்டிலும் வசிஷ்டரை இறைவன் மூழ்கச்செய்தார். நாட்கள் பல கழிந்தனவே ஆயினும் பெற்ற குழந்தையைப் பறிகொடுத்த துயரம் வசிஷ்டரின் நெஞ்சத்திலிருந்து அகலவில்லை. மீண்டும் அத்துன்பத்தை அகல்விப்பதற்கு விருஷாசலபதியான வேங்கடவனைத் தவத்தால் மகிழ்விக்க வேண்டும் என்பது நியதி. வசிஷ்டேசுவரத்திற்குத் தென்மேற்கில் அழகியதான பிரதேசமொன்றுள்ளது.

வசிஷ்டர் ஆங்கே இரண்டு மாதகாலம் எம்பெருமானுடன் ஒன்றிய மனத்தராய்த் தவமிருந்தார். எம்பெருமானும் தவத்தால் மகிழ்ந்து திருமலையிலிருந்து இங்கே எழுந்தருளி வசிஷ்டரை வரம் கேட்கப் பணித்தார். உடன் எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு திளைத்து புத்திரப் பேற்றை வேண்டினார். எம்பெருமானும் குலம் தழைக்க எண்ணி பௌத்திரபாக்கியத்தை வசிஷ்டருக்கு அருளினான். வரம்பெற்ற மகிழ்ச்சியால் எம்பெருமானை வணங்கி 'பிரசன்னவேங்கடேசராய்' எப்போதும் இங்கே எழுந்தருளி யிருக்கவேண்டும் என்பதாய் மீண்டும் ஒரு வரத்தை வேண்டினார்வசிஷ்டர். அதற்குச்செவிசாய்த்த எம்பெருமானும் 'எனக்கு உன்மேல் ஆதரம் பெருகியது. ஆனபடியால் உனது விருப்பம் போலே இங்கேயே நான் எழுந்தருளியிருக்கிறேன். உன்னுடைய மற்ற விருப்பங்களும் ஈடேறக்கடவதாகுக' என்றும் மறுமொழி கூறினார். மகிழ்ச்சியடைந்த வசிஷ்டர் மறுபடியும் இறைவனைத் தொழுது தன் ஆச்ரமத்திற்குத் திரும்பினார் என்பதுடன் (43ம் அத்யாயமெனும்) இரண்டாம் அத்யாயக் கதைச்சுருக்கம் இனிதே நிறைவுறுகின்றது.

-------------

## மூன்றாம் அத்யாயக் கதைச்சுருக்கம்

வசிஷ்டரின் பௌத்திரர் பராசரரின் தோற்றம் நிகழ்கின்றது. அவருக்கு பெயர்சூட்டுவிழா, உபநயனம் போன்ற சடங்குகளெல்லாம் உரிய காலத்தில் நிகழ்த்தப் பெற்றன. பராசரர் வசிஷ்டரது ஆச்ரமத்திலேயே வளர்ந்துவர, ஆச்ரமத்திற்கு மேற்குப் பகுதியில் அழகியதான ஒரு நீர்நிலை ஏற்படுத்தப்பட்டது. அதனருகில் பிரசன்னவேங்கடேசரின் பூசைக்காக ஒரு பூந்தோட்டமும் நிறுவப்பட்டது. மேலும்

தான் நிர்மாணித்த நீர்நிலையில் அமுதக்குடமும் நாட்டி அம்ருதசரஸ் என அழைக்கவும் பெற்றது. அம்ருதஸரஸ்ஸின் நீரால் விளைந்த பூக்களாலும், கனிகளாலும் பிரசன்ன வேங்கடேசரைப் பராசரர் 108 நாமாக்களைக்கொண்டு வணங்கி மகிழ்ந்தார். பராசரர் தோத்தரித்து வணங்கிய அஷ்டோத்தர சதநாமதோத்திரம் (இதனை நாமாவளியுடன் பின்னிணைப்பில் பார்க்கலாம்) காலவரின் வேண்டுகோளின் படி வியாஸர் பயன்கூறும் பகுதியுடன் விளம்பியுள்ளார். அத்துடன் (44ம் அத்யாயமெனும்) மூன்றாம் அத்யாயக் கதைச்சுருக்கம் முடிவுறுகின்றது.

-----

## நான்காம் அத்யாயக் கதைச்சுருக்கம்

தஞ்சாவூர் என்ற பெயர் இந்த க்ஷேத்திரத்திற்கு எவ்வாறு வந்தது ? என்பதை காலவருக்கு வியாஸர் கீழ்வருமாறு விளக்குகின்றார். பராசரர் மிகவும் மகிழ்ச்சியுற்றவராய் இத்தலத்திலேயே வெகுகாலம் தங்கியிருந்தார். அவ்வாறு வாழ்ந்திடும் காலத்தில் மழையில்லாது பெரும் பஞ்சம் நிலவியது. தஞ்சகாசுரன் நிர்நிலை எங்கேனும் உண்டோ எனப் பார்த்து வாருங்கள் என்று தன் மந்திரிகளை அனுப்பி வைத்தான். அவர்களும் பூவுலகெங்கும் சுற்றித்தேடிவிட்டு வசிஷ்டரின் ஆசரமத்திற்கு அருகிலமைந்த நீர்நிலையைக் கண்டனர். அங்கிருந்த முனிவர்களிடம் தீய முறையில் நடந்து கொண்டனர். அதைக் கண்ட பராசரமுனிவர் நேரே சென்று அவர்களை நிந்தித்தார். ஆத்திரமடைந்த அரக்கர்கள் பராசர முனிவரின் வசிப்பிடத்தையே அழித்தனர். பராசரர்

அரக்கர்களின் கொடுமை தாங்காது சிவபெருமானிடம் முறையிட, சிவபெருமான் அம்பிகையின் மூலம் தஞ்சகனை வீழ்த்தச் செய்கின்றார்.[1] பராசரர் போன்றோர் மகிழ்ச்சியுற, அம்ருத ஸரஸ்ஸில் வீழ்ந்த தஞ்சகன் மீண்டும் அம்ருத நீரைப் பருகி கஜவக்த்ரனாக (யானைமுகத்தோனாக) உயிர்த்தெழுந்து துன்புறுத்துகின்றான். பராசரரும் திருமாலைச் சரணம் புகத் திருமாலும் தன் சக்கரத்தைப் பிரயோகித்து யானை வடிவான தஞ்சகனை ஓட்டம் பிடிக்கச்செய்தார். யானையாக உருமாற்றங்கொண்ட அசுரனைக்கொல்ல திருமால் நரங்கலந்த சிங்கவடிவைத் தாங்குகின்றார்.[2] அப்போது தஞ்சகாசுரன் ஆள்அரியைக் கண்டு தன் அசுரத்தன்மையையும் களைந்து, “இந்த பராசரக்ஷேத்திரம் என் பெயரால் விளங்க வேண்டும்” என்று வேண்டினான். அவனது வேண்டுகோளை நிறைவேற்றி தஞ்சகனை விண்ணுலகம் அனுப்பினார் எம்பெருமான். இந்த பராசரக்ஷேத்திரம் ‘ஆதிகாலவ க்ஷேத்திரம்’ என்றும், தஞ்சகனின் வேண்டுகோளால் ‘தஞ்சா நகரம்’ எனவும் பெயர்பெற்றது. பராசரர் பிரசன்ன வேங்கடேசரை வணங்கி, ந்ருஸிம்மரும், நீலமேகரும்,[3] (காளிகா) தேவியும் இந்த க்ஷேத்திரத்தில் இப்படியே

---

1. B.1866/D.10357 என்ற எண் கொண்ட பராசரக்ஷேத்திர மாகாத்மியத்தில் (விண்ணாற்றங்கரை முதலான தஞ்சைத்தலப்பெருமை உரைக்குமிதில்) தஞ்சகன், தண்டகன், தாரகன் ஆகிய மூவரக்கர்கள் குறிப்புள்ளது. மூவரையும் யுத்தத்தில் காளி (விரணகோடி) அம்மன் மாய்க்கின்றாள். தஞ்சபுரி மாகாத்மியத்தில் தஞ்சக தண்டக தாரகர்களை முறையே ந்ருஸிம்ம வராக ஏகவீராதியர்கள் அழித்ததாகக் கூறப்பட்டுள்ளது.

2. B.1866/D.10357 என்ற எண்ணில் பதிவான பராசரக்ஷேத்திர மாகாத்மியத்தில் தஞ்சகன் இராக்ஷஸர்கள் மடிந்ததை எண்ணி பயந்து தன்னுருவை ஒழித்து யானை வடிவெடுத்தான். கருடாரூடரான விஷ்ணு நரங்கலந்த சிங்கமதானார்.

3. ந்ருஸிம்மர், நீலமேகர் போன்றோரின் வர்ணனம் பராசரக்ஷேத்திரம் - ஓர் ஆய்வு என்ற பிற்சேர்க்கை 2ல் காண்க.

எழுந்தருளி பிரசன்ன வேங்கடேசரான தங்களுடன் அருள்பாலித்து வரவேண்டும் எனக்கேட்டுக்கொண்டார். முனிவரின் மொழிகளுக்கு அப்படியே ஆகட்டும் என்ற இறைவனின் மறுமொழியோடு கூடிய பராசரரின் சரிதத்தை யார் வசமாக்கிக்கொள்வரோ அவர் அனைத்து பாதகங் களினின்றும் விடுபவர்.

இச்சரிதத்தை எழுதுபவர், எழுதுவிப்பவர், பூவுலகில் இன்பம் துய்த்து இறுதியில் முக்தியுமடைவார்கள்.

இத்துடன் (45ம் அத்யாயமெனும்) நான்காம் அத்யாயக் கதைச்சுருக்கம் முற்றுபெறுவதோடு நூலும் நிறைவினைப் பெறுகின்றது.



श्रीः

भविष्योत्तरपुराणे

# पराशरक्षेत्रमाहात्म्यम् *

## द्विचत्वारिंशोऽध्यायः

श्रीरामाय नमः । गालवः ।

भगवन्मुनिशार्दूल शुकतातं तपोनिधिम् ।
मया संपृच्छते यत्तत् प्रसन्नो वक्तुमर्हसि ॥ १

पृथिव्यां यानि तीर्थानि पुण्याण्यायतनानि च ।
तत्वतस्तानि सर्वाणि तपस्सिद्धिकराणि वै ॥ २

परापरपथा ब्रह्मन् भवता कथितानि मे ।
तथाप्यल्पेन यत्नेन यत्र पुण्यमनुत्तमम् ॥ ३

प्राप्नोति मनुजस्तस्मिन् क्षेत्रं जिज्ञासते मनः ।
विचिन्त्य साधु भवता तादृशं क्षेत्रमुत्तमम् ॥ ४

कथनीयमिदं यद्यत्यतिगुह्यतमं गुरु ।
तथापि मयि वात्सल्याद्दुपदेष्टुं तदर्हसि ॥ ५

**श्रीव्यासः -**

यत्पृष्टं भवता क्षेत्रं तद्विज्ञातं न केनचित् ।
एकोऽहमवजानामि नान्यस्मै कथितं पुरा ॥ ६

* B. 11214/D. 10046. T.M.S.S.M. Library, Thanjavur
B. 11215/D. 10047. T.M.S.S.M. Library, Thanjavur

अद्य तत्कथयिष्यामि परिचर्यां च तत्स्मरन् ।
हरिभक्तिविहीनस्य कथयस्व न कस्यचित् ॥ ७

वत्स ! पञ्चानदाख्यं यत् प्रख्यातं शांभवं पदम् ।
कावेर्याः उत्तरतटे गौतमादि निषेवितम् ॥ ८

तस्य दक्षिणदिग्भागे क्रोशद्धयमिते स्थले ।
प्रसन्नवेङ्कटेशस्य विष्णोरायतनं महत् ॥ ९

पराशरक्षेत्रमिति प्रख्यातं भुवनत्रये ।
तत्क्षेत्रं तादृशं यस्मात् नित्यं सन्निहितो हरिः ॥ १०

**गालवः** –

वेङ्कटेशाभिधो विष्णुः वृषाचलनिकेतनः ।
इत्यश्रौषं कथं तस्य सन्निधानमिहानिशम् ॥ ११

पराशरक्षेत्रमिति कथं च ख्यातिरस्य वै ।

**श्रीव्यासः** –

पितुः पितामहास्माकं वसिष्ठो भगवान् ऋषिः ॥ १२

शमादि गुणसम्पन्नं सर्वशास्त्रार्थवेदिनम् ।
सदृशामुत्तमश्लोकं प्राप्नुयाद्धरिमुत्तमम् ॥ १३

इति कामनया तत्र क्षेत्रे सर्वगुणान्विते ।
इदानीं तञ्जापुरं इत्याख्याते भुवि सर्वतः ॥ १४

तपश्चकार वरदं वेङ्कटेशं हरिं प्रति ।
तपसा तोषितस्तेन प्रसन्नो वैङ्कटेश्वरः ॥ १५

कामनानुगुणं पौत्रं ददौ तस्मै महात्मने ।
स एवास्मत्पिता श्रीमान् पराशर इति श्रुतः ॥ १६

प्रसन्नवेङ्कटेशाख्यमवाप्य तु ततो हरिः ।
अद्यापि वरदस्तत्र सन्निधत्ते जगत्पतिः ॥ १७

ततस्तदुत्तमं क्षेत्रं सन्निधानाद्धरेस्सदा ।
पराशरोऽपि तत्रैव यज्ञदानतपोव्रतैः ॥ १८

आराधयामास चिरं प्रसन्नं वेङ्कटेश्वरम् ।
पराशरक्षेत्रमिति ख्यातं तच्च ततोऽभवत् ॥ १९

ये यजन्ति तमुद्दिश्य यथासम्भवमत्र वै ।
यदेव विद्ययेत्युक्तं ते भजन्ते फलं द्विजाः ॥ २०

प्रयच्छन्ति (ब्राह्मणाना?) मन्नं वस्त्रं तदेतरत् ।
सहस्रगुणितं ये च प्राप्नुवन्ति ततः फलम् ॥ २१

तत्राल्पेनैव यत्नेन पुण्यस्कन्धमनुत्तमम् ।
प्राप्नोति तं कुरुक्षेत्रे यत्नेन महता तु यम् ॥ २२

दशाब्जैर्यत्कृतेन्यत्र त्रेतायां हायनेन तत् ।
द्वापरे तच्छमासेन तद्ध्यहोरात्रतःकलौ ॥ २३

तपसा ब्रह्मचर्यस्य जपादेश्च फलं महत् ।
तत्स्यादिह मुहूर्तेन युगेषु निखिलेष्वपि ॥ २४

तस्माद्गालव तत्क्षेत्रं जानीहि क्षेत्रसत्तमम् ॥

इति श्रीभविष्योत्तरपुराणे व्यासगालवसंवादे
पराशरक्षेत्रमाहात्म्ये द्विचत्वारिंशोध्यायः ।



## अथ त्रिचत्वारिंशोऽध्यायः

गालवः –

पुत्रार्थिनो वसिष्ठस्य प्रसन्नो वेङ्कटेश्वरः ।
पौत्रं प्राददिति ह्युक्तं तत्र पृच्छाम्यहं गुरोः ॥ १

पुत्रार्थितो कथं तस्य शक्तिनाम्नि सुते सति ।
कुतो वा तत्र च क्षेत्रे तपस्तस्य महात्मनः ॥ २

पुत्रं प्रार्थयमानस्य पौत्रदानं च तत्कथम् ।
कथं वा तञ्जनाम्नास्य क्षेत्रस्य जगति प्रथा ॥ ३

एतत्सर्वं च मे ब्रह्मन् ! विस्तराद्वक्तुमर्हसि ।

श्रीव्यासः –

पूर्वं वैरानुबन्धेन विश्वामित्रो महातपाः ॥ ४

वसिष्ठनन्दनश्शक्तिर्हन्यतामिति राक्षसम् ।
प्राहिणोत् छद्मना तेन निहतोऽपि च सम्भवात् ॥ ५

हतपुत्रो वसिष्ठाथ पुत्रविश्लेषवह्निना ।
दह्यमानो दिवारात्रं नैवाप सुखमृण्वपि ॥ ६

सपुत्रशोकदहनासहनोत्साहसोन्मुखः ।
प्राविशत्क्रूरमकरप्रकरं सागरं मुहुः ॥ ७

उल्लोलनिकरैस्सोऽप्यतिरमेऽवनिना युतम् ।
ततश्शैलाग्रमारुह्य पपात धरणीतले ॥ ८

पुष्पशय्येव मृदुला सापि तस्य व्यजायत ।
नकुलोप्यभवत्तस्य मृत्युस्सर्वहितैषिणः ॥ ९

साहसादुपरम्यासौ निर्विण्णहृदयस्ततः ।
इतिकर्तव्यतामोहाद्बभ्रामह दिशो दश ॥ १०

ततः क्रमेण सम्भ्राम्यन् क्षेत्रमेतच्छमाययौ ।
अत तत्र प्रसन्नात्मा चिन्तयामास तत्ववित् ॥ ११

अपुत्रस्य न लोकोस्तीत्यामनन्ति किलागमाः ।
तद्दोषमपनेष्यामि प्रतिष्ठाप्य महेश्वरम् ॥ १२

इति निश्चित्य वै लिङ्गं प्रत्यतिष्ठपदैश्वरम् ।
वसिष्ठेश* इति प्राहुस्तल्लिङ्गं भुवि मानवाः ॥ १३

यत्र तद्भक्तियोगेन नित्यं सन्निहितश्शिवः ।
पुरस्तस्य तटे कंचित् निर्ममे निर्मलोदकम् ॥ १४

अवगाहनमात्रेण सर्वपापनिवारणम् ।
वासिष्टतीर्थमिति च तं प्राहुस्तद्विधो जनाः ॥ १५

एवं कृत्वा ततो भूयश्चिन्तयमास नो गुरुः ।
अनपत्यत्वदोषस्य परिहारकृतेऽपि मे ॥ १६

शतृणा हतपुत्रत्वं शल्यं हृदि विवर्धते ।
तदुद्धारमहं कर्तुं यच्छ्रेयःतपसा बलात् ॥ १७

---

* कुम्भघोणं पञ्चनदं दृष्ट्वा विस्मयमानसः ।
शनैः शनैः प्रचक्राम तत्रस्थैः शिववल्लभैः ॥
कावेर्या दक्षिणे तीरे वसिष्ठं च ददर्श ह ।
आदिथ्यं विधिवच्चक्रे वसिष्ठोपि तथाकरोत् ॥
वसिष्ठतीर्थे स्नात्वाथ वसिष्ठेश्वरनामकम् ।
लिङ्गं दृष्ट्वाथ नृपतिः पूजां चैवाकरोन्नृपः ॥

(B.1866/D.10357/p.No.16.B)

तपसा च समाराध्यः कोनु देवो मयाधुना ।
कश्चिच्छीघ्रप्रसादस्याद्धरदश्चानृणीमिति ।। १८

तादृशं त्वथ निश्चित्य वृषाचलपतिं हरिम् ।
तत्तोषणीय समासात्तपःकर्तुं समुद्यतः ।। १९

वसिष्ठेश्वरदेवस्य निकटे निर्ऋतौ दिशि ।
रमणीयमनो देशे तपो दारुणमाचरत् ।। २०

फलमूलाशनो दान्तो दृढबुद्धिर्जितेन्द्रियः ।
चीरकृष्णाजिनधरो जटिलो मौनमास्थितः ।। २१

बाह्यार्थमखिलाच्चित्तात्प्रत्याहृत्य सयोगवित् ।
तस्मिन्नेव जगद्धाम्नि मनस्समतनोत्ततः ।। २२

आत्मन्यशेषदेवशं स्थितं विष्णुममन्यत ।
अनन्यचेतनस्तस्य ध्यायतो भगवान्हरिः ।। २३

सर्वभूतगतो विष्णुः सर्वभावगतोऽभवत् ।
मनस्यवस्थिते तस्य जगद्धातरि योगिनः ।। २४

न शशाक तदाधारमुद्धोढुं भूतधारिणी ।
पुरं मासद्वयं तस्मिन्नेकाग्रहृदयोऽभवत् ।। २५

भगवानथ सर्वात्मा तपसा तेन तोषितः ।
वृषाचलादुपागम्य तमुवाच चतुर्भुजः ।। २६

वसिष्ठवत्स ! भद्रं ते ! तपसा हरितोषितः ।
वरदोहमिह प्राप्तो वरं वरय सुव्रत ! ।। २७

बाह्योथ नैरपेक्षन्ते मयि चित्तं यदा हितम् ।
तुष्टोऽहमभवत्तेन तद्वृणीष्व वरं परम् ॥ २८

श्रुत्वेत्थं गदितं तस्य देवदेवस्य वै मुनिः ।
ददर्शोन्मीलिताक्षोऽथ हरिं ध्यानदृष्टि(ध्यानदृष्टि हरौ?)
पदम्* ॥ २९

सुमेरुशिखराकारगरुडारूढमव्ययम् ।
श्रियालसितवामाङ्कमकलंकेन्दुवक्त्रया ॥ ३०

तटिल्लतासमाश्लिष्टघनाघनसुमनोहरम् ।
ध्यायदाभ्यन्तरध्वान्तविध्वंसि नखचन्द्रिकम् ॥ ३१

योगीन्द्रविन्यस्तमनो मोहादङ्घ्रिनखावलीम् ।
तदंशुनिकरैर्भूयैस्सृजन्तमिव जाह्नवीम् ॥ ३२

हारतूणीरदिक्कारिरम्यजङ्घायुगोज्वलम् ।
बालातपसमाश्लिष्टमसारकदलश्रिया ॥ ३३

कनकाम्बरविभ्राजदूरुयुग्मेन शोभितम् ।
श्रीमन् गोचरकन्दर्पवासदुर्गनितम्बिकम् ॥ ३४

स्वदेहकान्तिकालाङ्घ्रिनिनदावर्तनाभिकम् ।
नाभिचारुसरस्तीरसोपानत्रिवलीयुतम् ॥ ३५

बिम्बिताशेषलोकेन कौस्तुभेन विराजितम् ।
स्फुटयन्तमिवाशेषं जाठरान्तरितं जगत् ॥ ३६

युगपद्दातुमर्तिभ्यः पुरुषार्थचतुष्टयम् ।
दधतं कमलछाया तस्तरांश्च तरुःकरान् ॥ ३७

---

* पुरः –B

आकीटमाचतुर्वक्त्रं अखिलं रक्ष्यते मया ।
अतीव बद्धविदुरं माणिक्योल्लासि कङ्कणैः ॥ ३८

मुक्ता धामाञ्चितगलविलसद्ध्वानमालिकम् ।
रसालकिसलोदञ्चित्पुष्पसौभाग्यशालिनम् ॥ ३९

रदनच्छदसंसर्पि दरहासेन भासुरम् ।
मुखकान्त्यम्बुदिप्रान्तकरन्मकरकुण्डलम् ॥ ४०

प्राणप्रजनतादैन्यविज्ञापनरसादिव ।
कर्णपर्यन्तसंसर्पि करुणापूर्णलोचनम् ॥ ४१

विकचाम्बुजविभ्राजदलिमोहविधायिना ।
निटिलन्यस्तकस्तूरीतिलकेन लसन्मुखम् ॥ ४२

किरीटप्रान्तविविधनवमाणिक्यकान्तिभिः ।
चित्रशाटिभिरभितो वितानितदिगन्तरम् ॥ ४३

शङ्खचक्रकटिन्यासवरोल्लासिकराम्बुजम् ।
वेङ्कटेशं समालोक्य ननाम भुवि दण्डवत् ॥ ४४

समुत्थितस्थलो धीमांस्तुष्टाव पुरुषोत्तमम् ।
शृङ्गग्राहकया वेदा यद्रूपं वक्तुमक्षमाः ॥ ४५

अपारमहिमानं तं कथं वा ध्वान्तविद्युहम् ।
एकोपि त्वं गुणी विष्णो मूर्तिभेदं समाश्रितः ॥ ४६

चराचरमिदं सर्वं सृजस्यवसि हंसि च ।
क्रियाविशेषैर्भगवन् क्रमाद्देवैरुपाधिभिः ॥ ४७

ब्रह्मा विष्णुर्हर इति गीयसे च मनीषिभिः ।
प्रकृतिश्च महान् बुद्धिर्मनः खं पवनोनलः ।। ४८

आपश्च पृथिवी चैव तवरूपं जगत्पते ।
सूक्ष्मं सर्वगतं शुद्धं प्रधानादपि यत्परम् ।। ४९

निर्गुणं निष्कलं शान्तं तद्वै त्वं परमार्थतः ।
प्रलये त्वयि लीनानि भुवनानि पुनर्हरे ।। ५०

विस्तारयन् करोषि त्वं वटबीजनिरूपणम्* ।
त्वदभिन्नं जगत्सर्वं त्वद्भिन्नमिव दृश्यते ।। ५१

तत्पित्रानतिरिक्तापि त्वद्भिन्ना कदली यथा ।
सर्वेषामन्तरात्मा त्वं वेत्सि सर्वमनोरथम् ।। ५२

निवेदयाम च तत्ते पुनरुक्तिस्तदा भवेत् ।
तथापि तुभ्यं देवेश ! कथयिष्ये मनोरथम् ।। ५३

नो चेन्मनो दुर्विनीतं भजते नहि निर्वृतिम् ।
विश्वामित्रेण भगवन् निहतः किल मे सुतः ।। ५४

तं सुतं देहि मे वंशः आयुषा तेन च प्रभो ।

श्रीभगवानुवाच –

अव्यक्तं तव पुत्रस्य तेऽपि आस्ते स्नुषोदरे ।
तद्भविष्यति पौत्रस्ते त्वत्प्रार्थितगुणान्वितः ।। ५५

पौत्रात्मना परिणतिः पुत्रस्यैव हिते मुने ।
तल्लाभ एव तल्लाभो नात्र कार्या विचारणा ।। ५६

---

* विडम्बनम् – B

तस्मादजनिष्यन्त स्यां द्वीपे नद्यां मनोहरे ।
द्वीपे नद्याममातृत्वे तैरयनं समभूद्यतः ॥ ११

तेन द्वैपायनो नाम्ना प्रथितोभुवनेष्वहम् ।
तपसेथ वसिष्ठोऽपि ययौ पूर्णमनोरथः ॥ १२

वसिष्टाश्रम एवासौ वसन्नथ पराशरः ।
तस्य पश्चिमदिग्भागे सरो रम्यं विनिर्ममे ॥ १३

प्रसन्नवेङ्कटेशस्य पूजायै पुष्पवाटिकाम् ।
अभितश्चास्य निर्माय चिन्तयामास वै ततः ॥ १४

नित्यं पुष्पफलोपेतलतापादपसंकुलाः ।
आराधनाय देवस्य कथमेषा भवेदिति ॥ १५

अत्रान्तरे समाकर्ण्य सुधाविभजनं हरेः ।
गत्वा सुधां स्वयं चापि प्रार्थयामास तं मुनिः ॥ १६

भक्तिवश्येन तेनापि दत्तमानय चामृतम् ।
कलशस्थापयामास तटाके स्वेन निर्मिते ॥ १७

ततस्तस्पामृतसर इति नामाभवद्भुवि*।
तद्वारिसेकसंवृद्धलतावृक्षसमुद्भवैः ॥ १८

---

* पुरा पराशरो नाम ऋषिः परमधार्मिकः ।
तपः कर्तुं महारण्यं पुण्यक्षेत्रं विचारयन् ॥
तीर्थयात्राप्रसङ्गेन कावेरीतीरमाप्तवान् ।
कावेर्या दक्षिणेतीरे मणिमुक्तानदीतटे ।
सरोवरं महारम्यं कल्हारकमलैर्युतम् ॥
मल्लिका मालती जाजी तुलसीकाननान्वितम् ।
एकान्ते विद्यमानं तत्सरोवरमनुत्तमम् ॥

सौरभ्यसम्पदाकृष्टदिङ्गदेभमधुव्रतैः ।
स्वदन्ताक्षिप्तगोक्षीरद्राक्षेक्षुरसमाक्षिकैः ॥ १९

अनल्पैः पुष्पनिवहैः भूरिभिः फलराशिभिः ।
नाम्नांमात्रोपदिष्टेन शतेनाष्टोत्तरेण सः ॥ २०

आराधयामास भृशं प्रसन्नं वेङ्कटेश्वरम् ।
एवमाराधयन् योगी नियतात्मा पराशरः ॥ २१

प्रसादाद्देवदेवस्य तं तं काममवाप्तवान् ।

---

मणिमुक्तां नदीपुण्यां कदलीवनमण्डिताम् ।
रम्यां पुण्यतरुच्छायां सैकतस्थलमण्डिताम् ॥
दृष्ट्वा पराशरऋषिः तपस्तप्तुं मनोदधे ।
नदीतटाकयोर्मध्ये उटजं समकारयत् ॥
वासं चकार तत्रैव मणिमुक्तानदीतटे ।
अभक्षो वायुभक्षोथ शीर्णपर्णाशनोऽभवत् ॥
एवं स बहुवर्षाणि कैश्चिद्द्विषिवरैसह ॥
तपस्चकार धर्मात्मा पराशरमहामुनिः ।
एकदा देवलोकं तु जगाम स महातपः ॥
स्वर्गलोके तदा विप्रो ह्यमृतं प्राप्तवान् हरेः ।
प्रयत्नेनामृतं नीत्वा मम क्षेत्रनिवासिनाम् ॥
जीवयामास सर्वेषां क्षिपामि च सरोवरे ।
एवं स निश्चयं कृत्वा करीरे स्वस्य चाक्षिपत् ॥
अमृतेन समायुक्तं कलशं जलपूरितम् ।
मणिमुक्तानदीतीरतटाके स्वाश्रमे त्यजत् ॥
अमृतं निहितं यस्मात् जलं तदमृतोपमम् ।
अमृताख्यसरो नाम ह्यभूल्लोकेषु विश्रुतम् ॥

(B. 1866/D. 10357. T.M.S.S.M. Library, Thanjavur)

## अथ पञ्चचत्वारिंशोऽध्यायः

हन्त ते कथयिष्यामि वत्स गालव साम्प्रतम् ।
क्षेत्रस्य तञ्जनाम्नास्य प्रख्यातं भुवि कारणम् ।। १

नारायणाद्भगवतो लब्ध्वा सर्वमनोरथान् ।
पराशरस्सुसन्तुष्टः तदाराधनतत्परः ।। २

आवास सुचिरं कालं तत्रैव क्षेत्रसत्तमे ।
एवं तत्र वसत्यस्मिन् कदाचिददतिदारुणी ।। ३

अनावृष्टिस्सुमहती प्रवृत्ता प्राणहारिणी ।
नदीसरस्तटाकाद्यास्तदाशोषमुपाययुः ।। ४

बभूव तेन दुर्भिक्षं सर्वत्र वसुधातले ।
जीवनोपाय सामान्यविकलाः सकलाः जनाः ।। ५

क्षुत्पिपासातरलितास्त्यक्तक्षेत्रगृहादयः ।
शैलानामन्तरद्रोणिरनूपांश्च महोदधेः ।। ६

आश्रित्य वर्णमालाद्यैः वर्तयन्ति स्म वै जनाः ।
प्राप्ते तु तादृशे काले तञ्जा नाम महासुरः ।। ७

मन्त्रयित्वा सहामात्यैराहूय निकटस्थितान् ।
गवेषयध्वं देवेषु सम्पूर्णसलिलं सरः ।। ८

आश्रमेषु च सर्वेषु विशेषेण तपस्विनाम् ।
देवालयेष्वपि तथा तेषु तत्तत्प्रभावतः ।। ९

सम्भावितास्स्युर्विपुलास्तादृशाः सलिलाशयाः ।
इत्युक्त्वा प्रेषयामास सर्वतश्चतुरान् भटान् ।। १०

तेन दृष्ट्वामृतसरः पुनर्गत्वा तमूचिरे ।
यत्नेन महतास्माभिः महीसर्वा गवेषिता ।। ११

श्रुता सलिलवार्तापि न कुत्राप्यसुरेश्वर ।
अथामृतसरो नाम दिष्ट्या दृष्टं सरोवरम् ॥ १२
वसिष्ठस्याश्रमाभ्याशे प्रसन्नमधुरोदकम् ।
हंसकारण्डवाकीर्णं पद्मोत्पलझषाकुलम् ॥ १३
पुष्पिताभिर्लताभिश्च फलितैरपि पादपैः ।
परितो विलसत्तीरं कुन्तैश्चलितवारिधिः ॥ १४
ततस्सपरिहारोऽसौ तत्सरस्तीरमागतः ।
तत्तीरसाधुसंवृद्धपुष्पवाटीकृतालयः ॥ १५
पुष्पाण्यपचिनोति स्म प्रमदाभिर्मदोद्धतः ।
छिनत्ति चास्मदङ्गास्वं* कर्णपूराय पल्लवान् ॥ १६
फलानि चाभ्यदाहर्षन् मधुराणि समं स्वनैः ।
चिक्रीड च सरो मध्ये निर्व्रीडः प्रमदान्वितः ॥ १७
विकृताभिषयन्ति स्म तद्भटान्निर्गतान्मुनीन् ।
एतद्दुश्चेष्टितं दृष्ट्वा पराशरमुनिस्स्वयम् ॥ १८
निर्गत्य भर्त्सयामास दुर्विनीतममुं तदा ।
भर्त्सनेनाथ संक्रुद्धस्तं कुब्जगृहोषितः ॥ १९
आज्ञापयामास भटानाश्रमोल्लुण्ठनायसौ ।
स्पुटतः संप्रविश्याथ मुनिवाटिस्समन्ततः ॥ २०
शाखाग्रशुष्यमाणानि वल्कलादि व्यपाटयन् ।
अच्छिद्यकर्णमूलेभ्यश्चिच्छिद्रुश्चाक्षमालिकाः ॥ २१
भिक्षुश्चकन्दमूलानि पूर्णांश्चकलशान्वपुः ।
वल्कलेरेव संबध्य नीवारान् कणकोर्जितान् ॥ २२

---

* B पाठः, चन्नराणीव – A

तच्छिष्यमूर्धन्यारोप्य शिबिरं स्वमुपानयन् ।
एवमाश्रमसंक्षोभात् क्रुद्धो वह्निरिव ज्वलन् ॥ २३

पराशरः पदक्षेपैः धारयन्निव मेदिनीम् ।
ययौ द्रुततरङ्गिण्योरभ्यर्णं मुनिभिस्सह ॥ २४

तदाटोपं समालोक्य पृच्छते स्मितपूर्वकम् ।
यथा तदखिलं वृत्तमाचख्युः हरये श्वसन् ॥ २५

अथ स्मृतां सन्निहितां देवीं कैटभमर्दिनीम् ।
हरिराज्ञापयामास पदायास्य दुरन्तकः ॥ २६

तथेति स भगवति रोषमादाय भैरवम् ।
विविधैरायुधैर्भीमान् भुजानष्टौ च बिभ्रती ॥ २७

एककालोदितानेकमार्ताण्डसदृशद्युतिः ।
उच्छ्रितस्तब्धलाङ्गूलमुत्सहे जटिलांसकम् ॥ २८

व्यात्ताननं तीक्ष्णदंष्ट्रं कपिलक्रूरवीक्षणम् ।
हर्यक्षं समधिष्ठाय हिमाद्रिशिखराकृतिम् ॥ २९

अट्टहासं विमुंचन्ती प्रतस्थे तज्जिघांसया ।
आगच्छतं च तां दृष्ट्वा तज्जोपि समरोत्सुकः ॥ ३०

उत्पपात पुरस्तस्या दण्डेनेवाहतः फणी ।
अथ देवी तदुपरि शरवर्षं ववर्ष ह ॥ ३१

स तु तद्वारयामास सवासा निशितैश्शरैः ।
तत्प्रविक्षेपकुपिता तस्मै चिक्षेप सा गदाम् ॥ ३२

तदा झटिति नम्रस्य सा किरीटमपातयत् ।
विस्रस्तकेशस्सततो गर्जन्नाप्लुत्यते गतः ॥ ३३

जघान प्रतले सान्यद्यानकेसरिणामुखे ।
तद्दृश्यमान हस्ताग्रं पुनराकर्षतो बलात् ॥ ३४

तस्य दक्षिणचिक्षेप शिवाग्रं शूलमम्बिका ।
तच्छूलशिखराघातनिर्भिन्नहृदयाथ सः ॥ ३५

तत्रामृतसरस्तीरे पपात च ममार च ।
तत्सैनिकवधायापि यानं हर्यक्षमम्भिका ॥ ३६

प्रायुङ्क्त सोऽपि सहसा निश्शेषं निजघान तान् ।
पराशरमुखान् सर्वे सङ्घीभूयाथ योगिनः ॥ ३७

तां तुष्टुवुः पुष्पवर्षं ववृषुः त्रिदशा अपि ।
मिषतामेव सर्वेषां सा च देवी तिरोदधे ॥ ३८

अथामृतसरस्तोयमेकसम्प्राप्तजीवनम् ।
गर्जितं गजवत्स्तम्बं दृष्ट्वाभितः पराशरः ॥ ३९

भूयोऽपि गत्वा हरये जीवितं तं न्यवेदयत् ।
स्वयमेवाथ तं हन्तुं निश्चित्य भगवान् हरिः* ॥ ४०

---

* आविर्बभूव तस्याग्रे विद्युत्सौदामिनी यदा ।
मणिमुक्तानदीतीरे गङ्गायाश्चोत्तरे तथा ॥
लक्ष्मीतीर्थसमीपे च शम्यारण्ये मनोरमे ।
दर्शयामास विप्राय रूपं दिव्यं तटित्प्रभम् ॥
(B. 1866/D. 10357 p.No. 4 a, T.M.S.S.M. Library, Thanjavur)

प्रसादप्रवणे नैतद्रूपेण तदसम्भवे ।
इत्यन्यद्रूपमास्थाय नीलमेघसमुज्वलम् ।। ४१

पीत्वामृतांशं सरसा भूयस्तज्जानि कारणम् ।
चक्रं जग्राह तरसा दैत्यचक्रप्रमर्दनम् ।। ४२

तञ्जस्तद्दर्शनात्रस्तो हस्तीभूय पलायत ।
अभ्याययौ च तं हन्तुं नरसिंहाकृतिर्हरिः* ।। ४३

हन्तुं दृष्ट्वा तमायान्तमासुरिं प्रकृतिं त्यजन् ।
आकल्पं कीर्तिमाकाङ्क्षन् प्रार्थयामास सोसुरः ।। ४४

इदं पराशरं क्षेत्रं मन्नाम्ना प्रथतामिति ।
तथैवेति प्रतिश्रुत्य तं जघानासुरं हरिः ।। ४५

---

* गजयोनिं समासाद्य सञ्चचार इतस्ततः ।
तञ्जासुरो हतो यत्र गजरूपं समाश्रितः ।।
तस्मिन्तीर्थे समायातः तृषार्तो क्षुधितो भृशम् ।
पिबन्नीरं ततो देवं ददर्श पयसि स्थितम् ।।
नृसिह्मरूपिणं विष्णुं शङ्खचक्रगदाधरम् ।
लक्ष्मीधराभ्यां सहितं खड्गपाणिं धनुर्धरम् ।।
तञ्जासुरं समाक्रम्य तिष्ठन्तं रवे रविं यथा ।
ददर्श गजयोनिस्थो वैश्यो भीतिसमन्वितः ।।
पपात च जले तस्मिन्भीतियुक्तेन चेतसा ।
एकादश्यां विष्णुभे च भाद्रे मासि तथैव च ।।
सरसः जलपानाच्च नृसिंहस्य च दर्शनात् ।
गजयोनिं परित्यज्य विष्णुलोकं जगाम ह ।।
(B. 1866/D. 10357. T.M.S.S.M. Library, Thanjavur)

तदादिगालवमुनेः क्षेत्रं पाराशरं त्विदम् ।
जगत्यां तञ्जानगरं इति ख्यातिमविन्दत ॥ ४६

ततस्तम्भपथात्तुष्टो मुनिवर्यः पराशरः ।
तुष्टाव प्रणतो देवं प्रसन्नं वेङ्कटेश्वरम् ॥ ४७

"जय कारुण्यजलधे ! जय भक्तार्ति भञ्जन ।"
जयाखिल जगन्नाथ ! जयासुरविमर्दन ! ॥ ४८

जयाब्धिकन्यारमण ! जयाब्जभवकारण ।
जयानन्दमयस्वामिन् ! जय चिन्मयकेशव ! ॥ ४९

नमस्ते देव देवेश ! नमस्ते विश्वमङ्गल ।
नमस्तुभ्यं नमस्तुभ्यं नमस्तुभ्यं नमो नमः ॥ ५०

नृसिंहनीलमेघश्च* देवी च प्रहितास्त्वया ।
सन्निधत्तामिह क्षेत्रे त्वया सह सदा विभो ॥ ५१

इति सम्प्रार्थयामास स्तोत्रान्ते समुनिर्हरिम् ।
अंगीचकार देवोऽपि तथेति मुनिभाषितम् ॥ ५२

एतत्ते सर्वमाख्यातं यत्पृष्टोऽहं त्वया मुने ॥ ५३

---

* पराशरक्षेत्रनृसिंहनीलमेघवर्णनं "पराशरक्षेत्रं एकं अध्ययनं" इत्याह्वये अनुबन्धद्वितीये द्रष्टव्यम् ।

पराशरस्य चरितमेतद्यः कुरुते वशम्* ।
पठेद्वा श्रृणुयाद्वापि पाठयेच्छ्रावयेदपि ॥ ५४

लिखेद्वा लेखयेद्वापि समुक्तस्सर्वपातकैः ।
इह भुक्त्वाखिलान्भोगांस्तदन्ते मुक्तिमाप्नुयात् ॥ ५५

इति श्रीभविष्योत्तरपुराणे व्यासगालवसंवादे
पराशरक्षेत्रमाहात्म्ये पराशरवरप्रदानं नाम
पञ्चचत्वारिंशोध्यायः ।

சிவகாமசுந்தரீஸமேத
ஸ்ரீசிதம்பரேச்வரஸ்வாமீஸஹாயம்



* B पाठः, यदि कुरुते वरे – A

## பிற்சேர்க்கை (अनुबन्धः) 1

ஸ்ரீ பராசரமுனிபிரணீதம்

# ஸ்ரீபிரசன்னவேங்கடேசாஷ்டோத்ர சதநாமஸ்தோத்ரம்

காலவ:

ப்ரூஹி தத்பகவான் மஹ்யம் நாம்னாமஷ்டோத்தரம் சதம்।
பராசரேண முனினா யேன ஸந்தோஷிதோ ஹரி: ॥

ஸ்ரீவியாஸ:

ஸுப்ரஸன்னோ வேங்கடேசோ வரதோ பக்தவத்ஸல:।
ஸர்வப்ராணி தயாகாரி ஸுலபஸ்ஸுவ்ரதோ மஹான் ॥ १

கேசவ: ஸ்ரீதர: ஸ்ரீசோ வாசுதேவோ ஜனார்தன:।
கோவிந்த: புண்டரீகாக்ஷா மாதவோ மதுசூதன: ॥ 2

நாராயணோ ஹ்ருஷீகேசே: பத்மநாபோ ஜகத்பதி:।
த்ரிவிக்ரமாச்யுதோ விஷ்ணு: சார்ங்கீ லக்ஷ்மீமனோகர: ॥ 3

விஷ்வக்ஸேனோ வாமதேவ: பீதவாஸோ விதுர்ஹரி:।
வாமன: ஸ்ரீகர: சாஸ்தா வைகுண்டோ பக்திவர்தன: ॥ 4

மஹானாஹுர் மகாஸத்வோ மஹாப்ராக்ஞோ மஹாத்யுதி:।
தைத்யஹந்தா தீனபந்து: சதுர்பாஹுர் தயாநிதி: ॥ 5

முகுந்தோபயதஸ்ச ஸ்ரீ: பகவான்பூதபாவன:।
அப்ரமேய: ஸுப்ரகாச: விப்ரமானஸமந்திர: ॥ 6

ஸ்வர்காபவர்கதாதா ச ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகாரக:।
வேதாந்தக்ருத் வேதவேத்யோ விபு: கல்யாணக்ருச்சுசி: ॥ 7

பக்தசிந்தாமணிர் கோப்தா பயக்ருத் பயமோசக:।
முரஹந்தா பலித்வம்ஸி தர்மசேதுர் த்ருடவ்ரத: ॥ 8

சிஷ்டபிரிய: துஷ்டிகர: துஷ்டஹ்ருத் விஷ்டரச்ரவா:।
பக்திவச்யோ யோககம்யோ ஸர்வசாஸ்த்ரபிரவர்த்தக: ॥ 9

மஹேச்வர: சிவோ தாதா பிதா மாதா சுக்ருத்குரு:।
ஞானசக்ஷு: ப்ரஜாநேதா பிரணவ: பிராணத: பிரிய: ॥ 10

அசேஷாப்யோ விமல: சாந்த: கிருஷ்ண: கம்ஸநிஷூதன:।
தனுர்தரோ தாசரதி: தசாஸ்யபிராணஹாரக:॥ 11

கனச்யாமோ கதாபாணி: லகுடர்வதபேதந:।
ஸ்வயம்பூ: ஸர்வலோகேசோ ஜகதாதிர் ஜகன்மய:॥ 12

அபாரமஹிமோதார: தாரக: புருஷோத்தம:।
இத்யேவம் நாமபிர் திவ்யை: தத்தத்குணநிபந்தனை:॥ 13

யம் ஸ்தௌதி வேங்கடாதீசம் ஸாயம் பிராதரதந்த்ரித:।
யம் யம் காமயதே காமம் தம் தம் ஸலபதே நர:॥ 14

புத்ரார்த்தீ லபதே புத்ரம் தனார்த்தீ லபதே தநம்।
தர்மார்த்தீ லபதே தர்மம் மோக்ஷார்த்தீ மோக்ஷமாப்னுயாத்॥

இமம் ஸ்தவமதீயானோ சிரத்தா பக்தி ஸமன்வித:।
அசலாம் ச்ரியமாப்னோதி யசஸ்சாப்னோதி சாச்வதம்॥ 16

ந சத்ருதோ பயம் யாதி வியாதிதோ வியாதிதோபி வா।
ஸர்வகல்யாண ஸம்யுக்த: தீர்கமாயுஸ்ச விந்ததி॥ 17

**இதி பவிஷ்யோத்தரபுராணே வியாஸகாலவ**
**ஸம்வாதே பராசரக்ஷேத்ரமாகாத்ம்யே**
**வேங்கடேசாஷ்டோத்தரசத**
**நாமஸ்தோத்ரம்**
**ஸம்பூர்ணம்**



## ஸ்ரீபிரசன்னவேங்கடேச
## அஷ்டோத்ரசதநாமாவளி:

1. ஓம் ஸுப்ரஸன்னாய நம:
2. ஓம் வேங்கடேசாய நம:
3. ஓம் வரதாய நம:
4. ஓம் பக்தவத்ஸலாய நம:
5. ஓம் ஸர்வபிராணிதயாகாரிணே நம:
6. ஓம் ஸுலபாய நம:
7. ஓம் ஸுவ்ரதாய நம:
8. ஓம் மஹதே நம:
9. ஓம் கேசவாய நம:
10. ஓம் ஸ்ரீதராய நம:
11. ஓம் ஸ்ரீசாய நம:
12. ஓம் வாசுதேவாய நம:
13. ஓம் ஜனார்தனாய நம:
14. ஓம் கோவிந்தாய நம:
15. ஓம் புண்டரீகாக்ஷாய நம:
16. ஓம் மாதவாய நம:
17. ஓம் மதுசூதனாய நம:
18. ஓம் நாராயணாய நம:
19. ஓம் ஹ்ருஷீகேசாய நம:
20. ஓம் பத்மநாபாய நம:
21. ஓம் ஜகத்பதயே நம:
22. ஓம் த்ரிவிக்ரமாய நம:
23. ஓம் விஷ்ணவே நம:
24. ஓம் சார்ங்கிணே நம:
25. ஓம் லக்ஷ்மீமனோகராய நம:

26. ஓம் விஷ்வக்ஸேனாய நம:
27. ஓம் வாமதேவாய நம:
28. ஓம் பீதவாஸஸே நம:
29. ஓம் விதவே நம:
30. ஓம் ஹரயே நம:
31. ஓம் வாமனாய நம:
32. ஓம் ஸ்ரீகராய நம:
33. ஓம் சாஸ்த்ரே நம:
34. ஓம் வைகுண்ட்டாய நம:
35. ஓம் பக்திவர்தனாய நம:
36. ஓம் மஹதே நம:
37. ஓம் மஹாஸத்வாய நம:
38. ஓம் மஹாப்ராக்ஞாய நம:
39. ஓம் மஹாத்யுதயே நம:
40. ஓம் தைத்யஹந்த்ரே நம:
41. ஓம் தீனபந்தவே நம:
42. ஓம் சதுர்பாஹவே நம:
43. ஓம் தயாநிதயே நம:
44. ஓம் முகுந்தாய நம:
45. ஓம் அபயதாய நம:
46. ஓம் ஸ்ரீபகவதே நம:
47. ஓம் பூதபாவனாய நம:
48. ஓம் அப்ரமேயாய நம:
49. ஓம் ஸுப்ரகாசாய நம:
50. ஓம் விப்ரமானஸமந்திராய நம:
51. ஓம் ஸ்வர்காபவர்கதாத்ரே நம:
52. ஓம் ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகாரகாய நம:
53. ஓம் வேதாந்தக்ருதே நம:

54. ஓம் வேதவேத்யாய நம:
55. ஓம் விபவே நம:
56. ஓம் கல்யாணக்ருதே நம:
57. ஓம் சுசயே நம:
58. ஓம் பக்தசிந்தாமணயே நம:
59. ஓம் கோப்த்ரே நம:
60. ஓம் பயக்ருதே நம:
61. ஓம் பயமோசகாய நம:
62. ஓம் முரஹந்த்ரே நம:
63. ஓம் பலிதுவம்ஸினே நம:
64. ஓம் தர்மஸேதவே நம:
65. ஓம் த்ருடவ்ரதாய நம:
66. ஓம் சிஷ்டப்ரியாய நம:
67. ஓம் துஷ்டிகராய நம:
68. ஓம் துஷ்டஹ்ருதே நம:
69. ஓம் விஷ்ட்டரச்ரவஸே நம:
70. ஓம் பக்திவச்யாய நம:
71. ஓம் யோககம்யாய நம:
72. ஓம் ஸர்வசாஸ்த்ரபிரவர்த்தகாய நம:
73. ஓம் மஹேச்வராய நம:
74. ஓம் சிவாய நம:
75. ஓம் தாத்ரே நம:
76. ஓம் பித்ரே நம:
77. ஓம் மாத்ரே நம:
78. ஓம் ஸுஹ்ருதே நம:
79. ஓம் குரவே நம:
80 ஓம் ஞானசக்ஷுஷே நம:
81. ஓம் பிரஜ்ஞாநேத்ரே நம:

82. ஓம் பிரணவாய நம:
83. ஓம் பிராணதாய நம:
84. ஓம் பிரியாய நம:
85. ஓம் அக்ஷோப்யாய நம:
86. ஓம் விமலாய நம:
87. ஓம் சாந்தாய நம:
88. ஓம் கிருஷ்ணாய நம:
89. ஓம் கம்ஸநிஷூதனாய நம:
90. ஓம் தனுர்தராய நம:
91. ஓம் தாசரதயே நம:
92. ஓம் தசாஸ்யபிராணஹாரகாய நம:
93. ஓம் அனாதயே நம:
94. ஓம் அசலாய நம:
95. ஓம் அநந்தாய நம:
96. ஓம் விக்ஞானசுகசாகராய நம:
97. ஓம் கனச்யாமாய நம:
98. ஓம் கதாபாணயே நம:
99. ஓம் லகுபர்வதபேதனாய நம:
100. ஓம் ஸ்வயம்புவே நம:
101. ஓம் ஸர்வலோகேசாய நம:
102. ஓம் ஜகதாதயே நம:
103. ஓம் ஜகன்மயாய நம:
104. ஓம் அபாரமஹிமோதாரகாய நம:
105. ஓம் புருஷோத்தமாய நம:
106. ஓம் காருண்யஜலதே நம:
107. ஓம் பக்தார்த்திபஞ்ஜனாய நம:
108. ஓம் அகிலஜகன்னாதாய நம:
109. ஓம் அசுரவிமர்தனாய நம:

110. ஓம் அப்திகன்யாரமணாய நம:
111. ஓம் அப்ஜபவகாரணாய நம:
112. ஓம் ஆனந்தமயஸ்வாமினே நம:
113. ஓம் சின்மயகேசவாய நம:
114. ஓம் தேவதேவேசாய நம:
115. ஓம் விச்வமங்களாய நம:
116. ஓம் தஞ்சாசுரஹந்த்ரே நம:
117. ஓம் ஆதிகாலவக்ஷேத்ரவாஸினே நம:
118. ஓம் பராசரமுனிபூஜிதாய நம:

*ஓம் ஸ்ரீபூமிநீளாஸமேத ஸ்ரீபிரஸன்னவேங்கடேச பரபிரஹ்மணே நம:*

*ஸ்ரீ (தஞ்சை)பிரஸன்னவேங்கடேச அஷ்டோத்தர சதநாமாவளி: ஸம்பூர்ணா*

குறிப்பு :- இந்நூற்றெட்டுப் பெயர்களால் புகழக்கூடிய ஸ்ரீபிரஸன்னவேங்கடேசப்பெருமாள் தோத்திரம் பராசரக்ஷேத்திர மாகாத்மியத்திலிருந்து எடுத்துக் கொடுக்கப்பெற்றுள்ளது.*பராசரமுனிவர் இத்தோத்திரத்தை தினமும் பாராயணம் செய்து தஞ்சை பிரஸன்னவேங்கடேசனைக் கண்ணாரக் கண்டதாக இம்மாகாத்மியம் கூறுகிறது. இதனை காலை மாலைகளில் படிப்பவர் விரும்பிய வற்றையும், அழியாச் செல்வத்தையும், நிலையான புகழையும், எதிரி, நோய் போன்றவற்றினால் பயமின்மையையும் கிட்டப்பெறுவர் என்பது இத்தோத்திரப்பயனாகும். இத்தோத்திரம் (44ஆம் அத்யாயமெனப்படும்) மூன்றாம் அத்யாயத்தில் தேவநாகரி எழுத்தில் காணக்கிடைக்கின்றது.

---

* B. No. 11214/D. 10046, த. ம. ச. சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

## பிற்சேர்க்கை (अनुबन्धः)2

ஸ்ரீ:

# பராசரக்ஷேத்திரம் - ஓர் ஆய்வு

### விண்ணாற்றங்கரை

தஞ்சைக்கோயில், தஞ்சை மாமணிக்கோயில் மணிக்குன்றம், தஞ்சையாளிநகர் என்றவாறெல்லாம் அழைக்கப் பெறும் இப்பராசரத் திருத்தலம் கருந்திட்டைக் குடிக்கும் பள்ளியக்கிரஹாரத்திற்கும் இடையே (சிங்கபெருமாள்கோயில் என்கிற பேருந்து நிறுத்தம்) உள்ள சாலையிலேயே காணக் கிடைக்கின்றது. இதற்கு பராசரக்ஷேத்திரம் என்பது பெயர்.

**1. 1. பராசரக்ஷேத்திர புராணம்**

பராசரர் இத்தலம் மேவி எம்பெருமானைக் கண்ணாரக் கண்டனுபவித்தார். பராசரமுனிவருக்கு எம்பெருமான் சேவை சாதித்த இடம் மணிமுத்தாநதிக் (வடவாற்றங்) கரையிலாகும். எம்பெருமானை நேரில் கண்டபோது-

ரிஷயோ தேவதாஸ்சைவ கந்தர்வாப்ஸரஸஸ்ததா।
ஸர்வே திஷ்ட்டந்து சாத்ரைவ மதர்த்தே யே ஸமாகதா:॥
க்ஷேத்ரம் மந்நாமகம் சாஸ்து தீர்த்தம் மந்நாமகம் ததா॥

(பராசரக்ஷேத்ரமாகாத்மியம், B.1866/D.10357/P..No.8a) என்கிறபடி என் பொருட்டுதாங்கள் இத்தலத்தில் காட்சியளித்தீர். ஆதலால் என்பெ:யரால் தலமும் தீர்த்தமும் (வம்புலாஞ்சோலை-அம்ருதபுஷ்கரிணியும்) முறையே பராசரக்ஷேத்திரம், பராசர தீர்த்தம் என்றே அழைக்கப்பெறவேண்டும் என வரம் கேட்டார். அன்று முதல் இத்தலம் பராசர க்ஷேத்திரமாயிற்று. பராசரக்ஷேத்திரமாகிய தஞ்சைமாமணிக் (விண்ணாற்றங் கரைக்) கோயில்கள் குறித்து சிறிது இனி நாம் சிந்திப்போம்

பராசரமுனிவர் தவம்மேற்கொள்ள இதுதான் சிறந்த இடம் என்று இங்கு வந்தார். அவ்வாறு இத்தலமேகித் தவம்

புரிகையில் தஞ்சகன், தண்டகன், தாரகன் ஆகிய அரக்கர்களும் மனைவிமக்களுடன் பசியினால் எங்குமலைந்து இறுதியில் இவ்விடம் வந்து சேருகின்றனர். அவ்வரக்கர்கள் நல்லோரைத் துன்புறுத்தி வந்தனராகையால் சுனையில் நீரருந்த வந்த அவர்களுக்கு பராசரர்-

ஸம்ரக்ஷணம் சஸாதுரனாம் பரமோ தர்ம உச்யதே ।
பரோபகார ஸத்ருசோ தர்மோ நாஸ்தி ந ஸம்சய: ॥
ததைவ பரஹிம்ஸாபிஸ்துல்யம் பாபம் ந வித்யதே ।
சுகஸ்ய காரணம் தர்மோ பாபம் துக்கஸ்ய காரணம் ॥
தஸ்மாத் பரேஷாம் கர்த்தவ்யா நைவ ஹிம்ஸா சுகார்த்திபி: ॥

என்று நல்லுரை நவின்றார். இருப்பினும் அவர்கள் பிறருக்குத் தீங்கிழைப்பதிலிருந்து மாறினார்களில்லை. ஆதலால் பராசர முனிவர் பிரஹ்மதேவரையும் சிவபெருமானையும் துதித்தார். சிவபெருமானும் பிரத்யக்ஷமாகி "காளிகாதேவியை ஸ்ருஷ்டி செய்து அரக்கர்களை வதம் செய்விக்கிறேன்" என்று கூறி மறைந்தார். பராசர மஹர்ஷியின் முன்பு காட்சி நல்கிய காளிகாதேவி "உமக்கு என்ன வேண்டும்" என்று கேட்க அதற்கு பராசரர் "தஞ்சகன் முதலான அரக்கர்களிடமிருந்து இந்த தபோவனத்தைக் காத்து வாருங்கள்" என்று கூறினார். அவரது வேண்டுகோளின்படி தஞ்சகன் போன்றோரைத் தன் சூலாயுதத்தால் தாக்கி அழித்தாள் காளிகாதேவீ. அழிந்து போன அவ்வரக்கர்கள் அம்ருதபுஷ்கரிணி நீரைப் பருகி மீண்டும் உயிர்த்தெழுந்தனர். வியப்படைந்த முனிவர் மாலிடம் சென்று வேண்டினார். பராசர மஹர்ஷியின் வேண்டுகோளுக்கிணங்கிய எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன்-

ஆவிர்பபூவ தஸ்யாக்ரே வித்யுத் ஸௌதாமினீ யதா ।
மணிமுக்தாநதீ தீரே கங்காயாச் சோத்தரே ததா ॥
லக்ஷ்மீதீர்த்தஸமீபே சசம்யாரண்யே மனோரமே ।
தர்சயாமாஸ விப்ராய ரூபம் திவ்யம் தடித்பிரபம் ॥
மதர்த்தே வித்ருதம் ரூபம் லக்ஷ்மீகருடசோபிதம் ।
நீலமேகஸமம் ரூபம் க்ஷேத்ரம் சாஸ்து ஸதா மம ॥

(B.1866/D.10357/P.No.4a & 8a)

என்றவாறே அவரது முன்னே அழகிய சமீவனத்தின் மணிமுக்தாநதிக்கரை-லக்ஷ்மீ தீர்த்தத்திற்கருகில் மேகத்தில் தோன்றும் மின்னல் போன்று நீலமேகச்யாமளனாய் திருமாமகளுடன் புள்ளூர்திச்செல்வனாகப் பராசர முனிவருக்குக் காட்சிகொடுத்தார். ஸ்ரீநீலமேகப் பெருமாளுக்கும் அரக்கர்களுக்கும் மாபெரும் போர் நடைபெற்றது. அப்போது தஞ்சகன் -

மதங்கஜத்வமாஸ்த்தாய தஞ்சகோபி யயௌ தத: ।
கரேணோத்ருத ஸாலேன தந்தைர் முஸலபீஷணை: ॥

என்கிறபடி யானை உருக்கொண்டு தன் தந்தங்களால் பெரிய ஸால விருக்ஷங்களைப் பிடுங்கி எடுத்து வந்து திருமாலுடன் போர் புரிந்தான். அதைக்கண்ட திருமால் -

தமாபதந்தமாலோக்ய ஸததோ வஜ்ரபிர் நகை: ।
ந்ருஸிம்ஹத்வமுபாஸ்த்தாய ஹரிஸாத்ருத்ய வேகத: ॥

உடன் விரைவாய் தன்னுருவை ஆளரியாய் மாற்றிக் கொண்டு அவனோடு போர் புரிய வந்தான். தஞ்சகன் -

ந்ருசிம்ஹ ! யதிதம் ரூபம் மதர்த்தம் பவதாத்ருதம் ।
அனேனைவ ஸ்வரூபேண உபவேஷ்டுமிஹார்ஹஸி ॥
கிம்சேயம் நகரீ புண்யா பிரதிதாலோகபாவனீ ।
தஞ்சாபுரீதி பகவன் பிரதிதாஸ்து மமாக்ஞயா ॥

"ஓ நரஸிம்ஹனே (ந்ருசிம்ஹ: என்ற சொல்லின் விளக்கம் - ந்ருசப்தேன நரப்ரோக்த: ஸிமோக்த்யா பந்த உச்யதே ஹனனாத்நரபந்தஸ்யநரஸிம்ஹ: ப்ரகீர்த்தித: !! (தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலக சம்ஸ்க்ருத சுவடிவிவரப்பட்டியல் எண்-20) நரஸிம்ஹ உருவை எனக்காகவே தானே உம்மால் எடுக்கப்பட்டது. ஆகையால் நீர் இப்படியே இங்கமர்ந்து இத்தலத்தை ஆள்வீராக" இதனால் இந்நகரமானது தஞ்சாபுரீ எனப்பெயர் பெறட்டும்" என்று கேட்டுக் கொண்டான். தஞ்சாபுரீ என்பது தஞ்சாபுரமாகி தஞ்சாவூர் என்று அழைக்கப்பெறுகிறது. The district gets Its name from Its head

quarter town, but the etymolgy of word is obscure. The original edition of this Gazetteer derives it from "Tanjan" a rakshasan or giant, who recording to the local legend, haunted the neighbourhood and was destroyed by the god Vishnu. His dying request was that the City might be named after him and this was granted. A more probable derivation is perhaps from Tanjan, 'refuge' which would make the name mean. City of refuge. (Madras district Gazetteers. Tanjore, Sml. Book No. 10009)

தஞ்சாவூர் என்பது நேராய் வரம் பெற்று நின்ற தஞ்சகாசுரன் தன் பேரால் விளங்குகின்ற பேரூர் ஆகும். "மகுததேசம், புளிந்ததேசம், மச்சியதேசம், மாளுவதேசம், காசிதேசம், ஆனந்ததேசம், திராவிடதேசம், லாடதேசம், அங்கதேசம், வங்கதேசம், கொண்கன தேசம், சிங்களதேசம், கோசலதேசம், சூராடதேசம், சிந்து தேசம், காச்மீரதேசம், மிலேச்சதேசம், சவ்ராஷ்ட்றதேசம், பப்பாறதேசம், பாஞ்சாலதேசம், குற்ச்சற தேசம், டில்லிதேசம், சோழதேசம், பாண்டியதேசம், சேரதேசம்" இவை (போன்ற) அன்பத்தாறு தேசத்துக்கும் மேலான தெய்வ பூமியாகவும், அன்பத்தாறு தேசத்துக்குள்ள கர்ணாடதேசத்தில், ராஜகம்பீர வளநாட்டில் உரையூர்ச் சிங்காதனத்துச் சாவடியான சோழமண்டலத்தில் அளகாபுரிக்கு பிரதிநாமமான தஞ்சை மாநகரம் திகழ்கின்றது. இம்மாநகரில் அமைந்துள்ள சக்கரசாமம் வல்லம் வலம்புரி போன்ற இடங்களுக்கு உரிய பெயர்க் காரணங்கள் கீழ்க் கண்டவாறு அறியப்பெறுகின்றன. தஞ்சகாசுரன் மாய்கையால் சாமரூபத்தால் சக்கரத்தால் அறுபட்ட தலம் சக்ரசாமம் (சக்ரசாமந்தம்) எனவும், இத்தஞ்சைக்கு உபகோட்டையாய் விளங்கிய தலத்தில் நரசிங்கன் வலாசுரனை மாய்த்த தலம் வல்லம் எனவும், விண்ணோர்கள் வந்திறங்கிய தலம் விண்ணாறு (விண்ணாறு குறித்த செய்திகளுக்கு சரித்திரச்சான்றுகள் பகுதியைப் பார்க்க) என்றும், தனதனாகிய குபேரனால் பிரதிஷ்டைசெய்த ஈச்வரன்

தஞ்சபுரீசர் ஆனந்தவல்லி என்றும், யூகிமுனி பூசித்த மஹாதிவ்ய க்ஷேத்திரத்தில் ஸ்ரீபகவான் அசுரர்களை வென்று சங்கத்துவனி செய்த தலம் வலம்புரி என்றும், அசுரர்களை அழித்ததற்பொருட்டாய் பகவானானவர் நீலமேகப்பெருமாள் மணிமகுடம் கொண்ட பெருமாள், சிங்கப்பெருமாளாயும் ஏககாலத்தில் அமுதபுஷ்கரிணிக்கடுத்திலங்கியும் அசுரன் கேட்ட வரம்போல நகரின் பெயர் தஞ்சைமாநகர் என்றும் தஞ்சை மாநகரத்தலபுராணம் தெரிவிக்கின்றது. தஞ்சைத் தலபுராணம் சுட்டுகின்ற அமுதபுஷ்கரிணீ வம்புலாஞ் சோலையில் காணப்படுகின்றது. வம்புலாஞ்சோலை என்னும் சொல் தஞ்சைப் பெருஉடையார் திருத்தேர் உலாவில் "செங்கையினாலங்கொருத்தி தென்றற்றேரான் விரும்பு மங்கைப் பருவம் மருவினாள். பங்கமிலாச் சொற்செறிந்த வம்புலாஞ்சோலையன்ன கூந்தலாள் நற்செண்பகவனநாச்சியாள்" என்ற ஒரு மங்கையைக் குறித்த வருணனையாக அமைந்துள்ளமை ஈண்டு நினைக்கத்தக்கது. திருமங்கையாழ்வார் இத்தலத்தை வம்புலாஞ்சோலை மாமதிள் தஞ்சை மாமணிக்கோயில் என்று மங்களாசாஸனம் செய்துள்ளார். அவ்வம்புலாஞ்சோலைத் தடத்தில் "தடம்பருகுகருமுகில்" எனத் திருமங்கை ஆழ்வார் போற்றிய திருமால் தஞ்சையின் விண்ணாற்றங் கரையினிலே காட்சி தருகின்றார். தடம்பருகு கருமுகில்வண்ணனின் கோயில் "தடேச்வரம்" என அளகாபுரி மாகாத்மியத்தில் (தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, ப. எண். 23 & 51ல்) குறிப்பிடப் படுகிறது. மார்க்கண்டேய முனிவருக்கு வீரநரசிங்கன் காட்சி நல்கியதாலும் முனிவரும் மூலஸ்தானத்தில் எம்பெருமானை எப்போதும் கண்ணால் பருகியபடியே இரு கரம் கூப்பித்தொழுதவண்ணம் நிற்கையாலும் இத்தலத்திற்கு மார்க்கண்டேயக்ஷேத்திரம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. தஞ்சகனுக்குப் பின் தண்டகனை மாய்க்க வந்த வராஹப்பெருமாள் நின்ற திருக்கோலத்தில் காட்சி நல்கும் நீலமேகப்பெருமாள் கோயில் வராஹக்ஷேத்திரம் ஆகும்.

விண்ணாற்றங்கரைக்கு ஸித்திக்ஷேத்திரம் என்ற மற்றொரு பெயர் உண்டென்பதை கண்டன (கண்டியூர்) க்ஷேத்திரமாகாத்மியம் (ஸ்ரீந்ருஸிம்மப்பிரியா - 9/2008. ப. எண்-32) குறிப்பிடுகிறது. எஞ்சிய அசுரனான தாரகனைத் தனியொருவளாய் நின்று வெல்லுகின்றாள் "ஏக வீரா" எனும் அம்பாள். அந்த, "ஏகவீரா" அம்மன் கோயிலே தற்போது ஏகௌரி கோயிலென வல்லத்தில் திகழ்கின்றது. அங்கும் தஞ்சகாசுரன் கதை கூறப்படுகின்றது. வல்லம் என்பது தஞ்சாவூர் தோன்றுவதற்கு முன் சோழர்களின் தலைநகரமாகத் திகழ்ந்திருக்கிறது. கடைச்சங்க காலத்தில் புகழ் பெற்று இருந்த பூம்புகார், உறையூர், ஆரூர், குடவாயில் போன்ற நகரங்களில் வல்லமும் ஒன்று. அங்கு அருள்பாலித்துவரும் காளி கரிகாற்சோழமன்னன் காலத்தில் கரிகாற்சோழ மாகாளி என்றும், பராந்தகன் காலத்தில் வல்லத்து பட்டாரகி (வல்லம் ஏகௌரி அம்மன் கோயில் அர்த்த மண்டபத்தூணில் காணப்பெறும் முதலாம் பராந்தகன் காலத்து கல்வெட்டு "எரியூர் நாட்டுவடகுளத்துறுப்பாடி துறுப்பாடி உடையான் அனந்தங்காரியாகிய பிராந்தகமுத்தரையன் "வல்லத்து பஷ்டாரகி" க்கு வைச்ச நொந்தா விளக்கு ஒன்று" முத்தரையர், ப. எண். 89) என்றும், ராஜராஜசோழமன்னன் காலத்தில் "காளா பிடாரி" என்றும், தற்போது "ஏகௌரி" அம்மன் என்றும் அழைக்கப்படுகிறாள். ஆகவே ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டு காலப்பழமையைப் பெற்றுள்ளது அத்திருக்கோயில். ஏகவீரா அம்பாள் மாய்த்த அசுரன் பெயர் தஞ்சகன் என்று வல்லத்தில் கூறப்படும் புராணத்தில் தெரிவிக்கப்படுகிறது. அசுரனுக்கும் அம்பாளுக்கும் இடையே கடும்போர் நடக்கிறது. இறுதியில் அசுரன் எருமை உருவங்கொண்டு அம்மனை எதிர்த்துப்போரிடவர, கடுங்கோபங்கொண்ட காளி எட்டுக் கரங்களுடன் வாளேந்தி எருமைக்கடாவினைத் தலைவேறு உடல் வேறாக வெட்டி வீழ்த்தினாள் என்பது வல்லத்தில் கூறப்படும் புராணமாகும். தாரகனையே (வல்லத்து பட்டாரகி) ஏகவீரா மாய்த்தார் என்றும், தாரகனுடன் போரிட்டு தனியொருவளாய் நின்று

மாய்த்ததன் காரணத்தால் நீலமேகப்பெருமாள் 'ஏகவீரா' என்று (வல்லத்து மாகாளியைப்) புகழ்ந்தார் என்பதனையும் பராசரக்ஷேத்திரபுராணம்கூ றுகின்றது. (தஞ்சைத்திருக்கோயில்கள்-29 & 30)

## 1. 2. தஞ்சபுரீச்வரப்புராணம்

தஞ்சபுரீச்வரரின் பெருமை குறித்த சோழ சம்பூ, பிருதீச்வரமாஹாத்மியம் (ப.எண்.37) ஆகியவை தரும் செய்திகளைச் சிறிது பார்ப்போம். குலோத்துங்கசோழன் எனப்படும் சிவபக்தன் இத்தலம் மேவிச் சிவபெருமானை-

உத்யத்ஸுதாம்சு சதநீதிதி பாஸ்வராய
ப்ரோத்யத் விபூதிதவளாங்க ஜடாதராய।
சைலாதி ராஜதனயா ஸஹிதாய துப்யம்
கைலாஸ சைலநிலயாய நம:சிவாய ॥ 10

பக்தேன யத் பதயுகார்ச்சனதோம்புதிஸ்து
பீதோர்த்திதேன விபுதை: புனருஜ்ஜிதோத।
விப்ரோத்தமேன முனினா பரமேச்வராய
தத் தாத்ருசே பகவதேஸ்து நம:சிவாய ॥ 11

ஜய ஜய பகவன் ப்ரஸீதாதிமாத்ரம் பவித்ரம் விபத்ரம் விசித்ரம் ச சாரித்ரயுக்தம் பதம் தே ப்ரபன்ன: க்ருபா பூர்ணபாத்ர ஸ்வதந்த்ர த்ரிணேத்ராவ நக்ஷத்ரநேத்ரா ச நேத்ரச்ரவோபி:க்ருதாலங்க்ருதே ஸாம்ப வித்ராஸ யுக்தம் ச ஸத்ராதிராஜே ச புத்ராதிஸக்தம் களத்ராநுஷக்தம் ததா க்ஷேத்ர மித்ராநுரக்தம் விபோ! திவ்யகாத்ர ப்ரபோ! பாஹி சம்போ!

ஸ்மரஹர தேவேச கா ஹி த்வதன்யா கதிர் வா ஹி லோகாதி லோகேஷு மா யாஹி காடின்யமஸ்மாஸு கஸ்மாதுபேக்ஷாம் கரோஷி த்வம் உக்ஷத்வஜாப்ய யக்ஷேச மித்ராரவிந்தாக்ஷ ஸம்பூஜிதாக்ங்ரே ! ஸதா பக்தரக்ஷார்த்த மாபத்ததீக்ஷா கஜாகாந்த தக்ஷாத்வர த்வம்ஸக ! க்ஷேமகாரின் ! த்ரிபுரஹர முனே: பர்ண மக்ஷுஸ்யபுத்ரம்க்ஷமாசாலி: காங்க்ஷமாணம் சிரஞ்சீவிதாம் க்ஷீணமாயுஷ்யமாலோக்ய தே

பாதபத்மார்ச்சகம் த்வத்கடாக்ஷம் ப்ரதீக்ஷம் தமுத்திச்ய யாத: ஸமாலக்ஷயன் க்ரூரமாசக்ஷமாணோ வ்ருதோ லக்ஷ்ய ஸங்க்யைர் கணை: க்ஷோபயன் ஈக்ஷணைனைவ ம்ருத்யுர் மஹாதேவ தம் யாவதாபீஷயாமாஸ தாவத் ததீயேன ரக்ஷேதி வாக்யேன தீனஸ்வரேணாநுகம்பா த்ரவீபூத சித்தேன ஹத்வா ச ம்ருத்யும் த்வயா ரக்ஷிதோ பக்தவர்ய: புனஸ்ஸோபி ம்ருத்யுச்ச ஸஞ்சி தோயம் வரத ! ததிதரே சாபி தே ராகவ: பாலிதா ஏவ சிஷ்டா நிஹத்யைவ துஷ்டான் தபோபிர் கரிஷ்டைர் வரிஷ்டைர் வஸிஷ்டாதிபி:ஸ்துத்ய கஷ்டாணி மே நாசயாஷ்டாபி ரிந்த்ராதிபிர் திங்ங்ருபைச் சாஷ்ட மூர்த்தே காநஷ்ட ஸ்யதுஷ்டஸ்யநஷ்டஸ்ய ஸத் கர்மணாபீஷ்ட மிச்சோ: ப்ரக்ருஷ்டஸ்ய கர்வேண புத்யா நிக்ருஷ்டஸ்ய பாபேன ஹ்ருஷ்டஸ்ய ஸந்துஷ்ட பக்தேஷு சம்போ ! தயாம் த்வம் குருஷ்வோபரி ஸ்ரீசிவ க்ஷம்யதாம் மேऽபராதோ நமஸ்தே நம: ॥

இதி ஸ ஸ்துத்வா குலோத்துங்க: -

தேஹம் புத்ரகளத்ரபந்தவ இமே
ஜீவோப்யஹம் சாபி யத்
கேஹம் திரவ்ய ஸுவர்ணதான்யமணய:
ஸர்வேந்த்ரியாணி ப்ரபோ ।
ஸர்வம் தத்பகவன் த்வதீயமகஜா
ஜானே ஸமஸ்த்தார்திஹன்
துப்யம் ஸ்ரீசிவ தத்வமேவ ஸஹதாம்
சம்போபராதான் பவான் ॥

என்றவாறு போற்றி மகிழ்ந்தான். குலோத்துங்கன் சூரிய வம்சத்தில் தோன்றியவன். மனைவியின் பெயர் கோமளாங்கி இருவரும் சீரும் சிறப்புமாய் இல்லறம் நடத்தி வர ஒரு நாள் இரவில் சிவபெருமான் துறவி வேடத்தில் தோன்றி அவர்களால் பணிவிடை செய்யப் பெற்றான். அவர்களது பணிவிடையால் மகிழ்ந்த சிவபெருமான் குலோத்துங்கனை குபேரனைக் கொண்டு பெருஞ்செல்வந்தனாக்கினான். இதற்காக குபேரர், சிவபெருமான் கட்டளையால்

தஞ்சபுரிக்கு வருகை தந்து (விண்ணாற்றங்கரை) தஞ்சபுரீச்வரரைத் தொழுததால் குபேரத்தலம் என்றும், சமீவனம் என்ற மற்றொரு பெயரும் இந்த தலத்திற்கு வழங்கப்படுகின்றன. அஸ்திஸ்வஸ்திகரம் என்பதாய் அனைத்து நலன்களையும் நல்கவல்லது சமீவனம். இங்கு ஆனந்தவல்லி அம்பிகையுடன் தஞ்சபுரீச்வரர் எனும் சிவபெருமான் உலகைக்காத்து வருகிறார், காமவேளை எரித்த இவர் தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்ச அவர்களைக் காத்தவர் என்று இச்சிவபெருமானின் சிறப்பை தேவர்கள் குலோத்துங்க சோழனுக்கு உரைத்தனர். குலோத்துங்க சோழனுக்கு போர் பலவற்றில் வெற்றி வாகை சூடக் காரணமாய்த் திகழ்ந்த தஞ்சபுரீசருக்கு விஜயேசர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. தஞ்சகாசுரன் ஒரு சமயம் பிரம்மதேவனிடமிருந்து வரம்பெற்று தஞ்சபுரிவாழ் மக்களைத் துன்புறுத்தினான். அனைவரும் சிவபெருமானிடம் முறையிட்டனர். உலகைக்காக்க ஆனந்தவல்லி அம்பிகையிடம் கூறினார். ஆனந்தவல்லி அம்பிகையும்

ஏகவீராஜயந்தீசமர்தினீமஹிஷார்தினீ ।
மாரீசரேணுகாகாலீகோடீசபரித: ஸ்த்திதா: ॥

(பிருஹதீச்வர மாகாத்மியம்)

என்றவாறு தன் சக்தியை ஏகவீரா, ஜயந்தி, மஹிஷமர்தினீ, மாரீ, ரேணுகா, காளி கோடி என்னும் எட்டு சக்திகளாகப் பிரித்துக்கொண்டு எண்திசையிலிருந்தும் போரிட வந்தாள். (ஏகவீரா, ஜயந்தி, மர்தினீ, சண்டகாதினி ஆகிய நால்வராய்த் தோன்றச்செய்து அசுரர் படைகளை ஒடுக்க அனுப்பி வைத்தாள். லவணாசுரனின் புதல்வர்களுள் தண்டகன் தென்பகுதியி லிருந்து 8000 படை வீரர்களுடன் ஏகவீரா அம்பிகையை எதிர்த்தும், வீரன் மேற்பகுதியிலிருந்து 10000 படைவீரர்களுடன் ஜயந்தி அம்பிகையை எதிர்த்தும், வஞ்சகன் கீழ்ப்பகுதியிலிருந்து 6000 படைவீரர்களுடன் மர்தினி அம்பிகையை எதிர்த்தும், தஞ்சகன்

வடபகுதியிலிருந்து 18000 படை வீரர்களுடன் சண்டகாதினி அம்பிகையை எதிர்த்தும் போரிட்டனர். செய்தி சேகரிப்பு - அளகாபுரி மாகாத்மியம், தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு) இத்தஞ்சைக்கு செல்லியம்மன், குந்தாளம்மன் (விண்ணாற்றங்கரை) வாஞ்சியம்மன், வடகாளியம்மன், பத்ரகாளியம்மன், ரேணுகை எனும் மாரியம்மன், எல்லையம்மன், செங்களநாச்சியம்மன் ஆகியோர் எல்லைக் காவலராக அமைந்துள்ளனர். கோடிச்வரசாமளபிரவாளகாளி போன்றோர் க்ரியா சக்திகள் என்கிற தஞ்சை மாநகரத் தலபுராணச் செய்தி ஈண்டு நினைக்கத்தக்கது. (தஞ்சாவூர்க் கிராமதேவதைகள் - உக்கிரமாகாளி, நாச்சாரம்மா, சோலையம்மா, கோடியம்மா, மாகாளியம்மா, ஐயனார், ரேணுகாதேவி, பத்ரகாளி, எல்லம்மா, காளிகாதேவி என்பனவாம் என்று 1793க்குரிய மோடித் தமிழாக்கக் குறிப்பு ஒன்று தெரிவிக்கிறது. ப. எண். 193, தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்) தஞ்சாசுரனோ வெனில் - ஜய ! ஜய ! ஜகஜ்ஜனனி ! விச்வ் விச்வார்த்திஸம்ஹாரதக்ஷே ! யக்ஷ ராஜார்ச்சிதே ! பக்ஷிவாஹாதி தேவைஸ் ஸதா பூஜிதே ! ரக்ஷிதாசேஷலோகே! சிக்ஷிதானைக தைத்யே ! ஸமுத்யஜ்ஜபாபுஷ்பஸாஹஸ்ர-காந்திப்ரவாஹைக திக்காரி தேஹப்ரபே ! ஸுப்ரபே ! ஸுதாஸிந்து மத்யஸ்தசிந்தாமணி த்வீப ஸௌதஸ்தநீபாலி புஷ்பாஸ்த்ருதோத்யத் ப்ரபாஜால ஸம்சோபி மஞ்சஸ்த காமேச்வராங்கஸ்த்திதே ! வ்யாப்ய ஸர்வம் ஸ்த்திதே ! தேவி ஹஸ்தோல்லஸத் தீப்யமான ப்ரவாளைக தண்டோச்சலச் சாமராப்யாம் ச்ரியா சாபி தேவ்யா கிராம் பார்ச்வபாகேஷு ஸம்வீஜிதே ! ஸர்வைச்ச ஸம்பூஜிதே ! ஸுதாபூர்ணகும்பம் ஸுவர்ணம் ததானா ச வாமே கரே தக்ஷிணேனாபரேணாபி தர்வீம் மணீ நிர்மிதாம் ஸர்வலோகாய திவ்யாம் ஸுதாம் த்வம் திசந்தீ மஹாதேவி ஸம்ரக்ஷஸே யோகிபிர் த்யாயஸே ச்ரேயஸே கதம் காரம் அம்பாம் பராம் தேவதாம் ஸ்தௌமி விச்வேசி மாதஸ்துதி வ்யாஜதோ மே க்ருதான் த்வம் க்ஷமஸ்வாபராதான் ஸமஸ்தான் சிவே தே நமஸ்தே நம: ।

"அம்ருத கலசம் அன்னக் கரண்டியுடன் அருள் சுரக்கும் அன்னபூர்ணாம்பிகையே! அனைவரின் துயரை அகற்றுபவளே ! ஆயிரம் செம்பரத்தை பூவால் அலங்கரித்து ஒளிர்பவளே ! அருகில் இருவர் சாமரம் வீச அமர்ந்து அருளாசி புரிபவளே ! என்றவாறெல்லாம் ஆனந்தவல்லி அம்மனை தண்டகம் பாடி மகிழ்வித்தான். தண்டகத்தால் மகிழ்ந்த ஆனந்தவல்லியம்பாள் அவனுக்குக் காட்சி நல்கி விரும்பும் வரம் கேட்கப் பணித்தாள். தஞ்சகனும், "நீ எனக்கிங்கே காட்சி தந்ததால் இத்தலம் சிறப்புற்றது. எனக்கு மறுபிறப்பற்ற மோக்ஷத்தையும், விரும்புவோர்க்கு விரும்புவதை அளிக்கும் தேவியாகவும் நீ திகழ வேண்டும். இதுவே யான் வேண்டும் வரம்" என்று தெரிவித்தான். அம்பாளும் தஞ்சகன் விரும்பியதைத் தந்தருள முன்வந்து தஞ்சாசுரன் சிவசாயுஜ்யத்தைப் பெற்றதோடு தலத்துறைநாதர் தஞ்சேசர் என்றும், சூலேன பாதயாமாஸ தஞ்சம் தந் நாமத:புரம் (பிருஹதீச்வர மாகாத்மியம்) என்றவாறு இத்தலத்திற்கு "தஞ்சபுரீ" என்பதும் காரணப்பெயராயின. தஞ்சபுரீசரால் பெருஞ்செல்வந்தனான குலோத்துங்க சோழனும் -

*"சதம் முகானி காவேர்யா: தீரஸ்த்தான்யாலயான்யபி ।*
*உத்தர்துகாமோ ந்ருபதி: சிவத்த தனேன வை ॥*
*ஸ்ரீகண்டேசாலயம் புண்யம் சக்ரே ராஜா சிவாலயம் ।*
*மாத்ருபூதேச்வரஸ்யாத ததா ரத்னகிரீசது: ॥*
*ததோன்னதம் ச விக்னேசம் ஸ்த்தாபயமாஸ பர்வதே ।*
*சுகந்தி குநதளாம்பாயா: ததாலயமனுத்தமம் ॥*
*த்ருண ஜ்யோதீச்வரஸ்யைவ ததா மரகதாசலம் ।*
*சில்பிபி: காரயாமாஸ ஜீர்ணோத்தாரம் சிவாலயம் ॥*
*அகிலாண்டமஹாதேவ்யா: ததா ஜம்பூபதே ப்ரபோ ।*
*கர்பாகாரம் கோபுராணி ப்ராகாராணி வ்யதாந்ந்ருப: ॥*
*மஹாப்ராகாரமேவைகம் சிவபூதி ப்ராதானத: ।*
*காராயாமாஸ சில்பஜ்ஜை: உன்னதம் பாஸுரம் ததா ॥*
*ஸ்ரீரங்க ஸம்ஜ்ஞிகஸ்யாபி திவ்யாலயம் அதாகரோத் ।*
*ஜம்பூநாதக்ஷேத்ரகுணம் த்ருஷ்ட்வா சிச்யே ஹரி:ஸ்வயம் ॥*

ப்ரணிபத்ய மஹாதேவீம் அகிலாண்டேச்வரீம் சிவாம்।
ததா தக்ஷிணகோகர்ணம் .... ஸ்தாத் பர்வதோபி ச॥
சிவாலய த்வயம் சக்ரே சில்பிபி: த்ருஷ்தா ந்ருப:।
ததான்யான்யபி புண்யானி ஹ்யாலயானி மஹேசிது: ॥
காரயாமாஸ தேவஸ்ய க்ருதஸ்த்தானேச்வரஸ்ய ச।
ஸ்ரீமத் பஞ்சநதீசஸ்ய கர்பாகாரம் ச கோபுரம் ॥
ப்ராகாரம் காரயாமாஸ ஸ்ரீபிரயாணேச்வராலயம்।
சமிவனம் ஸமாகத்ய யத்ர தேபே பராசர: ॥
குபேராய ப்ரஸன்னோபூத் யத்ர தஞ்சாபுரேச்வர:।
யத்ர ஆனந்தமஹாவல்லீ தேவீ தஞ்சாஸுரம் ரணே ॥
நித்யாஷ்ட மஹாசக்தீரஷ்டதிஷ்வபி தத்ர வை।
பிரார்த்தயாமாஸதாம் தேவீம் ஸ்வஸ்ய ப்ரக்யாதிஹேதவே।
வஸிஷ்ட: பூஜயாமாஸ ததேசான்யாம் மஹேச்வரீம் ॥
க்ருத்வா தீர்த்தம் ச தத்ரைவ ஸ்வநாம்னா முனிபுங்கவ:।
தத்தக்ஷிணே வைத்யநாதோ தேவ்யா ஸந்நிஹித: ஸதா॥
ஸாதி ரூபேண தேவேச: புஷ்பமாலாதரோ ஹர:।
தந்நைர்ருதே தேவதீர்த்தம் ஸ்நாதாநாம் ஸர்வகாமதம்॥
தத்ர லிங்கம் மஹாதேவ்யா ஸ்திதம் கரதலேச்வரம்।
தஞ்சேச்வராத் ப்ரதீச்யாம் ச நீலமேகம் ஹரிம் ததா॥
ந்ருஸிம்மம் ச ததா ராஜா த்ருஷ்ட்வா வை
கொங்கணேச்வரம்।
யத்ர கொங்கணஸித்தாய ப்ரஸன்ன: பார்வதீபதி: ॥
ஸ்தலமத்யத்புதம் த்ருஷ்ட்வா தத்ர தத்ராயலயம் வ்யதாத்।
தஞ்சேச்வரஸ்ய தேவஸ்ய ப்ராகாரம் கோபுரம் ததா॥
ஆனந்தவல்லீ தேவ்யாச்ச ஸுதாபுஷ்கரணீ தடம்।
சில்பிபி: காரயாமாஸ குலோத்துங்கோ மஹீபதி: ॥
மடான்னதானகரணை: அக்ரஹாரானுபாலனை:।
மஹாபூஜோத்ஸவாதீனி சிவதாமஸு வை ந்ருப: ॥
காரயாமாஸ நியமாத் தேவசோளம் ஸுதம் ததா।
அபிஷிச்ய ஸ்வகே ராஜ்யே பத்ன்யா ப்ராப சிவாந்திகம் ॥
குலோத்துங்கஸ்ய சரிதம் பக்தஸ்யாத மஹீபதே:।
உக்த்வா ச்ருத்வாபி மேதாவீ ஸர்வபாபை:ப்ரமுச்யதே ॥

என்று பிருஹதீச்வரமாஹாத்மியம் - ஏழாம் அத்யாயத்தில் தெரிவித்துள்ளபடி காவிரிக்கரையிலுள்ள சிவாலயங்களையும் குறிப்பாக ஸ்ரீகண்டேசர், தாயுமானவர், சுகந்த குந்தளாம்பிகை போன்றோரின் கோயில்களையும் மரகதாசலக்கோயிலையும் கட்டியுள்ளார். திருவானைக்காவல் அகிலாண்டேச்வரி, ஜம்புநாதர், கருவறைக்கோபுரங்கள், திருச்சுற்றுகள், பெருவீதிகள், திருநெய்த்தானம், பஞ்சநதீச்வரர் கருவறை மற்றும் கோபுரங்கள், திருப்பழனத்தில் திருச்சுற்று ஆகியவற்றை ஏற்படுத்தியுள்ளார். திருவரங்கன் கோயிலுக்கும் திருப்பணி மேற்கொண்ட குலோத்துங்கசோழன் தஞ்சபுரீச்வரருக்கு திருச்சுற்று கோபுரம் ஆகியன அமைய சுதாபுஷ்கரிணிக் (வம்புலாஞ்சோலை அம்ருதபுஷ்கரிணிக்) க்கரையில் ஆலயத் திருப்பணியும் செய்தான். தஞ்சபுரீச்வரரின் மேற்கேயமைந்த நீலமேக நரசிம்மாதியரையும் கண்டு போற்றி, கொங்கணேச்வரருக்கும் குலோத்துங்கன் கோயிலெடுத்தான். குலோத்துங்கன் தனது வயது முதிர்ந்த பருவத்தில் ஆட்சி பீடத்தில் தன்னுடைய புதல்வன் தேவசோழனுக்குப் பட்டங்கட்ட நினைத்தான். கல்விகேள்விகளில் சிறந்து விளங்கிய தேவசோழனுக்கு உரிய தருணத்தில் அமைச்சர் தேவதத்தனால் நல்லுபேதேசம் நிகழ்த்தப்பெற்றது. பின் ஸ்ரீஆனந்தவல்லி உடனுறை தஞ்சபுரீச்வரர் ஆலயத்தில் தேவசோழனின் திருமணமும் பட்டாபிஷேகமும் நிறைவேறின. இவ்வாறு இறைத் தொண்டில் தன்னை ஈடுபடுத்திய குலோத்துங்கசோழன் தன்னுடைய 90ஆம் வயதில் கைலாசப்பதவி அடைந்தான். பின்னர் அரசப் பொறுப்பேற்ற குலோத்துங்கனின் மகன் தேவசோழனும்-

மத்யார்ஜுனம் கும்பகோணம் ச்வேதாரண்யம் த்ருதி ஸ்தலம்।
ஸ்ரீவாஞ்சியம் மங்களேசம் குத்தாலம் துர்கேச்வரம்॥
ஏதானி சிவதாமானி ஹ்யக்ரஹாராம்ஸ்ச பூரிச:।
க்ருத்வா ராஜா மஹாபாஹு: லேபே சைவம் பதம் தத:॥
ஷஷ்டி வர்ஷாணி ந்ருபதி: தர்மத: பரிபால்ய காம்॥

என்று பிருஹதீச்வரமாகாத்மியம் எட்டாம் அத்யாயத்தில் தெரிவித்துள்ளபடி திருவிடைமருதூர், கும்பகோணம், திருவெண்காடு, ஸ்ரீவாஞ்சியம், மங்களேசம் குத்தாலம், துர்கதேச்வரம் போன்ற தேவாலயத்திருப்பணிகளைத் தொடர்ந்தான். தேவசோழன் அறுபது ஆண்டுகள் சிறப்புற வாழ்ந்து கைலாசப் பதவியைப் பெற்றான். இவ்வாறு தஞ்சபுரீச்வரர் திருக்கோயில் குலோத்துங்கசோழனின் ஈடுபாட்டாலும் திருப்பணியாலும் சிறப்புற்றிலங்குகிறது.

## 2. இலக்கியம்

தஞ்சை மாமணிக்கோயில் தொடர்பான இலக்கியங்களாக ஆழ்வார்கள் மங்களாசாஸனம், தஞ்சை துவாதச கருட மஹோத்ஸவ விழாச் செய்தி, தலக் குறிப்புச் சுலோகங்கள் போன்றவை இனி முறையே விளக்கப் படுகின்றன.

### 2. 1. ஆழ்வார்கள் மங்களாசாஸனம்

இத்திருத்தலம் பூதத்தாழ்வார், திருமங்கைஆழ்வார் ஆகிய ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்று நூற்றெட்டுத்திவ்யதேச வரிசையில் மூன்றாவதாகத் திகழ்கிறது. உடம்புருவில் மூன்றொன்றாய் மூர்த்தி வேறாய் என்கிறபடி மும்மணிக் கோயில்களைப் பெற்ற தனிச்சிறப்பு வாய்ந்த திவ்யதேசமாக விளங்குவதும் தஞ்சை மாமணிக் கோயில்தான். தமருள்ளம் தஞ்சை, வம்புலாஞ்சோலை மாமதிள் தஞ்சை மாமணிக்கோயில், தஞ்சைக்கோயில், தஞ்சை ஆளிநகர், மணிக்குன்றம் என்பவை தலம் பற்றியதான ஆழ்வாரின் திருவாக்குகள். செஞ்சொற்கவிகளான ஆழ்வார்கள் இத்தலத்தெம்பெருமான்களை தஞ்சை யாளியைப் பொன்பெயரோன் நெஞ்சமன்றிடந்தவன், பொன்செய் மால்வரைமணிக்குன்று, தடம்பருகு கருமுகில் என்பதாகப் போற்றிப் பரவியுள்ளனர். மேலும் தஞ்சகன் தனக்கு காட்சியளித்த திருமாலை "அனேனைவ ஸ்வரூபேண உபவேஷ்டும் மிஹார்ஹஸி" (தஞ்சை திருக்கோயில்கள், ( P. No. 28) என்பதாய் இங்கமர்ந்து அருளாசி புரியுமாறு

வேண்டிக்கொண்டான். அவனது மொழி கூறும் புராண சொற்றொடரில் அமர்ந்து என்ற சொல் காணப்படுவதால் இத்திவ்யதேசத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களில் மூலமூர்த்திகள் யாவரும் அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருகின்றனர். காரணரூபமான நரசிம்ம வராஹ அவதார விசேஷங்களையும் இங்கே காண முடிகின்றது. உற்சவமூர்த்திகள் அனைவரும் நின்ற திருக்கோலத்தில் நாராயணனாக சேவை ஸாதிக்கின்றனர். திருமங்கை ஆழ்வார் தமது பெரிய திருமொழிப் பாடலில் பெரிய திருமந்திரத்தை நாராயண நாம வைபவத்தை வெளியிடும் போது பாடல் வழியாக முதன் முதலில் நாராயண மூர்த்தியாய்க் காட்சி கொடுத்தவர் திருக்குடந்தை ஆராவமுதன். இரண்டாம் நிலையில் ஸேவைதந்த பெருமைக் குரியவர்களான நாராயண மூர்த்திகளை வம்புலாஞ்சோலைமாமதிள் தஞ்சை மாமணிக்கோயிலே வணங்கி நம்பிகாளுய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா" என்கிற பாடலிலிருந்தே நாமறியலாம். ஆதலால்தான் இத்திவ்யதேசத்தின் உற்சவமூர்த்திகள் நாராயணர்கள் என்பது சிறப்பானதொரு செய்தி.

## 2. 2. தஞ்சை துவாதசகருட மஹோத்ஸவம்

தஞ்சைப் பன்னிருகருடசேவைப் பெருவிழா பல ஆண்டுகளாக நடைபெற்றுவரும் பழமை வாய்ந்தது. இதனைத் தஞ்சைப் பள்ளியக்ரஹாரம் துவாதச கருடாழ்வார் தாஸர் என்னும் R. V. V. நாராயணசாமிராவ் என்பவரால் 1906ஆம் ஆண்டுதொடங்கப்பெற்று 1930 வரை 25 ஆண்டு காலம் சீரும் சிறப்புமாய்க் கொண்டாடப்பெற்று வந்தது. 1931 முதல் 1934 வரை இவ்வுற்சவம் நடந்ததற்கான சான்றுகள் கிட்டவில்லை. 1935 ஆம் ஆண்டு முதல் பன்னிரு கருடசேவைப்பெரு விழாவினை தஞ்சை இராமானுஜ தர்சன சபையினரின் பெருமுயற்சியால் சிறப்பாய் நடத்தி வரப்பெறுகிறது. இந்த விழாவினை உறுதி செய்யும் வகையில் அடிப்படை ஆதாரமாய்த் திகழ்கின்றது 1939 ஆம் ஆண்டு தஞ்சை அரசர் திருக்கோயில்களின் திருக்கோயில்களின் கண்காணிப்பாளர் திரு ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் வெளியிட்ட

"தஞ்சைத்திருக்கோயில்" என்னும் நூல். சித்திரை மாதம் ஆண்டுதோறும் அக்ஷய திருதியை நன்னாளில் 12 கருட சேவை விழா திருக்குடந்தையில் நடைபெறுகிறது. வைகாசி விசாகத்தில் நம்மாழ்வாருக்கு நவதிருப்பதி எம்பெருமான்கள் கருடசேவைக் காட்சி நல்குகின்றனர். (விஷ்ணுஸ்தலமஞ்சரி ப. எண். 60) ஆனால் திருமங்கை ஆழ்வாருக்குக் கருடசேவைக் காட்சி திருநாங்கூரில் தை அமாவாசையின் மறுநாள் நடைபெறுகிறது. அந்த திருநாங்கூர் பதினொரு கருட சேவையைப் போன்றதே ஆகும் இந்த தஞ்சைப் பன்னிரு கருட சேவைப் பெருவிழா. இப்பெருவிழாவில் 22 கருட வாகனங்களில் திருமால் காட்சி தந்து, தஞ்சை நகர் வலம் வந்து அடியார்களை மகிழ்விக்கின்றனர். ஆண்டுதோறும் பன்னிரு கருட சேவைப் பெருவிழாவினை, 1. ஆழ்வார் மங்களாசாஸனம், 2. ஆழ்வாருக்கு கருடசேவைக் காட்சி, 3. நவநீதசேவை, 4. விடையாற்றி என்கிறபடி நான்கு நாட்களாகக் கொண்டாடி வருகின்றனர் தஞ்சை இராமனுஜ தர்சன சபையினர். (தஞ்சை திருக்கோயில்கள், ப. எண் - 44)

### 2. 2. 1. ஆழ்வார் மங்களாசாஸன விழா

ஆண்டு தோறும் வைகாசித் திங்கள் கருடசேவை திருவோண நன்னாளில் நடைபெற முதல் நாள் ஆழ்வார் மங்களாசாஸனத் திருவிழா நடைபெறுகிறது. காலை சுமார் ஒன்பது மணியளவில் ஸ்ரீவைணவ சமயாச்சார்யரான ஸ்ரீவேதாந்த தேசிகன் நீலமேகப் பெருமாள் கோயிலில் தன் சந்நிதியிலிருந்து புறப்பட்டு நீலமேகப் பெருமாள், ஹயக்ரீவர், தனிக்கோயில் நாச்சியார் ஆனசெங்கமலவல்லித் தாயார் ஆகியோர்களின் சந்நிதிக்குச் சென்று மங்களாசாஸனம் புரிகின்றனர். ஆசார்ய ஸார்வ்பௌமனின் மங்களாசாஸனத்திற்குப் பிறகு ஸ்ரீநீலமேக மணிபர்வத ஸ்வாமிகள் இருவரும் தஞ்சையாளி ஸ்ரீவீரநரசிங்கப்பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளுகின்றனர். ஸ்ரீவீரநரசிங்கன் சந்நிதியில் ஸ்ரீநீலமேக வீரநரசிங்க மணிபர்வத ஸ்வாமிகளை திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் செய்தருளுகிறார். திருமங்கையாழ்வார்

எழுந்தருளி தம்முடைய பாக்களால் எம்பெருமானைப் போற்றும் விழா மங்களாசாஸனப் பெருவிழா ஆகும். அத்தருணம் "வாடினேன்" எனத் தொடங்கும் பத்து பாசுரங்களும், "உடம்புருவில்" "என் செய்கேன்" "தமருள்ளம் தஞ்சை" எனத் தொடங்கும் ஸ்தலத்து பாசுரங்களும் ஸேவிக்கப்படுகின்றன. திருமங்கை ஆழ்வாருக்கு மாலை, பரிவட்டம், தீர்த்தம், சடாரி மரியாதைகள் செய்யப்படுகின்றன. அதனைத் தொடர்ந்து அனைவருக்கும் தீர்த்தம் பிரசாதம் முதலியன வழங்கப்படுகின்றன.

### 2. 2. 2. ஆழ்வாருக்கு கருடசேவைக் காட்சி

தடம்பருகுகருமுகிலைத் தஞ்சைக் கோயிலின் நீலமேகப்பருமாள் மீது வரகவி நாராயணதாஸு "பராசரமுனீந்திரருகொரக்கு பரககருடவாகனமுனே பரம பக்துலுநிந்துபொகடபரமசேவநிச்சி நட்டி ஸ்ரீ வெலயுநு தஞ்சபுரிலோ சுக்கிலபக்ஷமாசிரவணநக்ஷத்ர சுபதிநமு நீதுவைபவ செப்பதரமநெவரிக்கையிநாவசகாநு நாது மநோவரம் பவதிச்சி பூறெளவுமா துவாதசராழ்வார் நாராயணதாஸுகாநுஜேயுமா" பராசரமுனிவரின் பக்தி, பரமகைங்கர்யம் ஆகியவை முன்னிட்டு தஞ்சபுரியில் ஜ்யேஷ்ட (தமிழ்-வைகாசி) மாதம் திருவோணத் திருநன்னாளில் கருட வாகனத்தில் காட்சி தந்த வைபவத்தைக் கூறவார்த்தைகள் போதாது என்பதாக அத்தெலுங்கு கீர்த்தனையின் பொருள் உணர முடிகின்றது. அந்த கருட சேவை வைபவத்தை அனைவரும் கண்ணால் பருகிக் களிக்கவே துவாதசகருடாழ்வார்தாஸர் தஞ்சை துவாதச கருட மகோத்ஸவத்தை ஏற்படுத்தியுள்ளார்போலும். தற்போது அந்த விழாவின் அங்கமாக ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் திருவோண நன்னாளில் எம்பெருமான் கருட சேவையில் காட்சி தருகிறார். திருமாலுக்கு உகந்த ஊர்தி கருடன். திருமங்கையாழ்வாருக்குத் தாம் காட்சிநல்க வேண்டுமென நினைத்து கருட வாஹனம் ஏறி ஓடோடி

வருகின்றான். ஆழ்வார் எம்பெருமானைப் போற்றுவது மங்களாசாஸனம் ஆகும். எம்பெருமான் திருமங்கை ஆழ்வாருக்கு அருள்புரிவது கருடசேவைக்காட்சி. கருடசேவை விழாவில் திருமங்கையாழ்வார் அன்னப் பறவை வாஹனத்தில் அலங்கரிக்கப்பட்டவராய்க் கருட சேவையைக் கண்டவண்ணமே எம்பெருமானுடைய வடிவழகை அனுபவித்தவராய் தஞ்சை நகர்வலம் வர ஸ்ரீநீலமேகப் பெருமாள் ஆண்டாளுடன் காட்சி தருகின்றார்.(பெருமாள் ஆண்டாளுடன் கருடசேவைக் காட்சி தருதலுக்கு ஆதாரம்- சிறப்பப்குதி - ஸ்ரீசடகோபரும் ஸ்ரீபாஷ்யகாரரும் என்ற தலைப்பின் கீழ் கொடுக்கப் பட்டுள்ளது) அவரைத் தொடர்ந்து முறையே ஸ்ரீவீரநரசிங்கன், மணிக்குன்றன், கல்யாணவேங்கடேசன், வரதராஜன், கோதண்டராமன் போன்ற 22 திருமால்கள் கருட வாஹனத்தில் திருமங்கைமன்னனுக்கு சேவை சாதிக் கின்றனர். ஸ்ரீநீலமேகாதியர் காலைச் சரியாக 7 மணியளவில் புறப்பட்டுத் தஞ்சை ராஜவீதிகளில் வலம் வந்து சுமார் பன்னிரண்டு மணியளவில் தன் இருப்பிடம் சென்று சேருவர்.

### 2. 2. 3. நவநீத சேவை விழா

ஆண்டுதோறும் நவநீத சேவைவிழா கருடசேவையின் மறுநாள்கொண்டாடப்பெறுகிறது.இதனை வெண்ணைத்தாழி மஹோத்ஸவமென்பர். எம்பெருமானின் நிலை பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என ஐவகைப்படும். அர்ச்சை என்கிற ஐந்தாம் நிலைதான் கோயில்களில் மூர்த்தியாக வழிபடும் நிலை. பரமபதம் தொடங்கி அர்ச்சை ஈறாக அவதரணம் (இறங்குதல்) செய்த பெருமையினைப்பாடும் ஆழ்வார்கள் ராமன், கிருஷ்ணன் முதலான விபவாவதாரப் பெருமையினையும் ஆங்காங்கே விவரிக்கின்றனர். அவ்வகையில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்வாவின் பாலப்பருவ நிகழ்ச்சிகளை நினைவிற் தருமாறு அமையப் பெற்றதுதான் வெண்ணைத் தாழி எனப்படும் நவநீதசேவையாகும். இந்த நவநீதசேவை விழா 1936 ஆம்

ஆண்டு நின்றுபோன பன்னிரு கருட சேவை விழாவை மறுபடியும் துவக்கும்போது தொடங்கப் பெற்றது. 1906 முதல் 1930 ஆண்டு வரை கருடசேவை விழா மட்டும் நடைபெற்று வந்தது குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

### 2. 2. 4. விடையாற்றி விழா

ஆண்டுதோறும் கருட சேவை விழாவின் நான்காம் நாளாக விடையாற்றி உற்சவம் கொண்டாடப்பெறுகிறது. பிரம்மோத்ஸவத்தில் பிரம்மாதி தேவர்களையெல்லாம் பேரீதாடனம் செய்து வரவழைப்பர். உற்சவ முடிவில் அவரவர் இருப்பிடம் அனுப்பி வைத்தலை செய்தபின் நடைபெறும் விழாவே விடையாற்றி உற்சவம் ஆகும். ஆனால் இங்கு விழா, விழாவிற்கு வந்தோரை உபசரித்து அனுப்புதல் ஆகியவை முடித்து இளைப்பாறுகின்ற வகையில் எம்பெருமான் விடாய்தீர (சிரமப்பரிகாரமாய்) நீராட்டுவிழா கண்டருளுவதே இவ்வுற்சவத்தின் நோக்கமாகும். ஆதலால் விண்ணாற்றங்கரையில் அருள்பாலிக்கும் ஸ்ரீநீலமேக மணிபர்வத வீரநரசிம்மப் பெருமாள் கோயில் களில் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் மேற்கொள்ளப் படுகின்றன. இத்துடன் நான்கு நாட்கள் கொண்ட பன்னிருகருடசேவைப் பெருவிழா நிறைவு பெறுகின்றது.

### 2. 3. தலக் குறிப்புச் சுலோகங்கள்

இத்திருத்தலத்தில் ஸ்ரீநீலமேக -மணிபர்வத- வீரநரஸிம்ஹ - பரபிரஹ்மணே நம: என விழாக்காலங்களில் இறுதியில் கூறுவது மரபு. மூர்த்தி வேறாய் மூன்றொன்றாய் அமைந்த எம்பெருமான்களை நினைப்பதன் பொருட்டே ஆகும். தலக்குறிப்புச் சுலோகங்களையும் அவ்வரிசை யிலேயே தஞ்சபுரீசர் குறிப்புகளையும் நாம் காண்போம்.

2. 3. 1. ஸ்ரீநீலமேகர் சுலோகங்கள்

ஸாக்ஷாத்க்ருத்ய பராசரஸ்ய தபஸா
பத்மாதடிஜ்யோதிஷோ
பூத்வா நீலவலாஹகத்யுதிபய:
பீத்வாம்ருதம் ஸாரஸம்।
ஹத்வா தஞ்சகதண்டகப்ரப்ருதிகான்
ய: பாதி லோகத்ரயம்
தம் தஞ்சாபுரிவாஸிநம் கமலயா
ஸ்ரீநாரஸிம்ஹம் (நீலமேகம்) பஜே ॥

(பராசரக்ஷேத்திர மாகாத்மியம் , B.1866/D.10357, P. No. 63 & தஞ்சை திருக்கோயில்கள்)

அதஸீ புஷ்ப ஸங்காசம் துளஸீ தாமபூஷிதம் ।
நீலமேகமுதாராங்கம் ஸ்ரீமஹீ ஸேவிதம் பஜே ॥
(தஞ்சை திருக்கோயில்கள்)

ஸ்ரீமத்தஞ்சபுரே ஸுகாஸனரதி:
ஸ்ரீ நீலமேகாஹ்வய:
தேவீசோணஸரோருஹாச மதுப-
வியாப்தத்ருஷண்டாவ்ருதம்
தீர்த்தம் தத்ர விமானமாசு பலதம்
ஸந்தர்சனாத் ஸுந்தரம்
பிராசீனாபிமுக பராசரதபே
பாஹ்யாக்ருதீ ராஜதே ॥
(அஷ்டோத்தரசதாதி திவ்யதேசவிவரணம், ப. எண்-14)

பராசரநுதே க்ஷேத்ரே பரகாலாதி கீர்த்திதே ।
பங்கேருஹாருணாயுக்த பர்ஜன்யாயாஸ்து மங்களம் ॥
நிகமாந்த குரோ: புத்ர நைநாசார்யாதிவாஸிநே ।
நியதம் தேசிகாம்நாய நித்ய சுரோதாய மங்களம் ॥
வம்புலாஞ்சோலவாஸாய வகுளேபாதபே ஸ்த்தலே ।
வைசாகர்க்ஷேவதாராய வாரிமேகாய மங்களம் ॥
(Dr. S.K.R & Dr. A.V.R.)

**2. 3. 2. ஸ்ரீமணிபர்வதர் சுலோகங்கள்**

ஜ்ஞானாகாரம் ஹ்ருதயநிலையம்
நாரஸிம்ஹம் ஸுரேசம்
விச்வாதாரம் ககனஸத்ருசம்
நீலமேகம் குணாட்யம் ।
பத்மாகாந்தம் கமல நயனம்
யோகிபிஸ்ஸேவ்யமானம்
ஸ்ரீசம் பூர்வை: பரிசிதபதம்
ரத்னசைலம் பிரபத்யே ॥
*(ஸ்ரீதேசிகன் மங்களாசாஸனப் பிரக்ரியை, ப. எண்-119)*

**2. 3. 3. ஸ்ரீவீரநரஸிம்ஹர் சுலோகங்கள்**

ஸ்ரீமத்தஞ்சபுராலயஸ்து பகவான்
ஸ்ரீமன்ந்ருஸிம்ஹோ மஹான்
தேவீதஞ்சபுரீச்வரீ ச்ருதிசிரோ
வேத்யம் விமானம் பரம் ।
தீர்த்தம் தத்ர து காளிகா(கன்யா)ஹ்வயஸர:
பச்யன்திசம் தக்ஷிணாம்
மார்க்கண்டேயவரபிரதானஸுமுகம்
சாஸீனரூபோ ஹரி: ।
*(அஷ்டோத்தரசதாதி திவ்யதேசவிவரணம், ப. எண்-14)*

ஸ்ரீவீரந்ருஹரே: பத்னீம் தஞ்சாபுரநரேச்வரீம் ।
லக்ஷ்மீம் தஞ்சாபிதாம் நௌமி ஸா ஸ்ரீ: ரக்ஷது மாம் ஸதா ॥

தஞ்சாபுரே வீரந்ருஸிம்ஹ ரூபீ-
ஹ்யர்ச்சாஸ்வரூபே ரமயாவிராஸீ: ।
ஸ்துத்வா கலித்வம்ஸ கவிர்பவந்தம்
லேபே ஸ மந்த்ரார்த்தமகோபிலேச ! ॥
*(ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹஸ்தவம், ப. எண்-31/250,251)*

அந்திமதிச்சடையானும் அயனு-
முனது அங்கத்தே
செந்திருவில் புணருண்மை தெரிந்தும்
இவண் திகைப்பேனோ ?

முந்தியொருநாள் வனத்தில்
மூலமே எனக்கூவும்
தந்தியரசு உயக் காத்தாய்
தஞ்சை நாராயணனே
கும்பமுலை மடவார் செய்
கோரணியிற் குலைந்தாலும்
உம்பர்பெறலரும் நின்தாட்கு
உரிமையுறல் உணராயோ
நம்படிமை உயக்காப்பான்
நரசிங்க வடிவெய்தி
தம்பமொன்றின் இடைவந்தாய்
தஞ்சை நாராயணனே.

பதின்மர் கவித்தொடையோடு என்
பாடலுங் கொள்கிலையாயின்
விதி மனைவி ஆதியர் நின்
வியன்புகழை வெறுக்காரோ
அதிரத கோடிக்கு எமனாம்
அர்ச்சுனன் தேர் உதைத்தாண்ட
சதிருணர்வார்க் கெளிதாய நற்
தஞ்சை நாராயணனே

*(வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய தஞ்சைக் கோயிற் பாடல்கள் (4) தஞ்சை நாராயணன் பதிகம், பாடல் 8, 9, 10, பதிப்பாசிரியர், ஆர். மாதவன், தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்)*

வகுளே பாதபே க்ஷேத்ரே விமானே வேதசுந்தரே ।
விரஜாதீரவாஸாய வீரஸிம்ஹாய மங்களம் ॥
சரண்யநகரே புண்யே சர்மஸௌபாக்யதாயினே।
ஸூரசந்த்ராக்னிநேத்ராய ஸ்ரீந்ருஸிம்ஹாய மங்களம் ॥
பஞ்சாஸ்ய வீரரூபாய பரகாலாதி கீர்த்திதே ।
தஞ்சமாம்பா ஸமேதாய தஞ்சநாதாய மங்களம் ॥

( Dr. S.K.R & Dr. A.V.R.)

**2. 3. 4. தஞ்சபுரீசர் தலக்குறிப்புச் சுலோகங்கள்**

அஸ்தி ஸ்வஸ்திகரம் சமீவனமிதி
ப்ரக்யாதமேகம் ஸ்தலம்
யஸ்மின் தஞ்சபுரீச்வர: ஸ பகவான்
ஆனந்தவல்யா ஸஹ ।
ஸாந்நித்யம் குருதே ஸுராஸுரகுரு:
பூர்ணோ ஜகத்ரக்ஷகோ
லிங்காகாரதர: பர: சிவதர:
சக்த்யம்பயா பூர்ணயா ॥
(சோழசம்பூ, தஞ். ச. ம. நூ. சம்ஸ். எண். 1988, ப. 16)

ஸப்ரபுர் கிரிசுதா ஸகதேவ
ஸ்ரீமதங்க்ரிகமலாலிமனஸ்க: ।
ஐக்ஷதோபநகரம் கிரிஜாமா-
னந்தவல்லிமபி தத்பதிமீசம் ॥
(சாஹேந்திரவிலாஸம் ஸ்ரீதரவேங்கடேசர் P.No. 64, Sarga-4/V-23)

அஸ்தி தே நதிரியம் சசிமௌலே-
நிஸ்துவம் ஹ்ருதி விபாது மதீயே ।
ஸ்கந்தசைலதனயா ஸகமீசா-
னந்தவல்யதிபதே தவ ரூபம் ॥
(சாஹேந்திரவிலாஸம் by ஸ்ரீதரவேங்கடேசர் P.No. 66, Sarga-4/V-32)

**2. 3. 4. ஸ்ரீஆனந்தவல்யம்பிகா தியானம்**

அருணகனகபாஸாம் துங்கபீனாதிபாத்ராம்-
ஸ்தனயுகளசுபாட்யாம் மந்தஹஸ்தாம் த்விஹஸ்தாம் ।
கரத்ருதகனகாப்ஜாம் லம்பஹஸ்தாம் சவாமே-
தருணதபனசோபாம் சந்த்ரமௌலேர் பவந்தீம் ॥
(சதுர்விம்சதிமூர்த்திலக்ஷணம் - சரசுவதி மகால் நூலக வெளியீடு-
ப. எண்-104)

நீலகண்டா த்ரிலோசனா தஞ்சை ஈச்வரா
துஷ்டநிஹ்ரஹா சிஷ்டபாலனா தஞ்சை ஈச்வரா
சூலதரா கங்காளா தஞ்சை ஈச்வரா
மதிசூடும் வேணியனான தஞ்சை ஈச்வரா

அங்கஜ கர்வஹரா தஞ்சை ஈச்வரா
எங்கள் ஆனந்தவல்லி நாயகா தஞ்சை ஈச்வரா
இங்கொரு துணைகாணேன் தஞ்சை ஈச்வரா
சகஜேந்திரனை நான் சேரப்பண்ணும் தஞ்சை ஈச்வரா
(ஐந்து தமிழிசை நாட்டியநாடகம்/பூலோகதேவேந்திர விலாசம்/P.No. 29)

சரணம் ஸ்ரீகௌரீசா சரணம் தஞ்சேசா (1)
அரவபூஷணா வேத ஆனந்தவல்லி நாதா (2)
(ஐந்து தமிழிசை நாட்டியநாடகம்/பூலோகதேவேந்திர விலாசம்/ P.No. 30) மேலும் தஞ்சைவெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சியிலும் தஞ்சபுரீசர் குறிப்பு காணக்கிடைக்கிறது.

### 3. வரலாறு

இப்பகுதியில் வரலாற்று தொடர்பான செய்திகளாக சரித்திரமுரைக்கும் சான்றுகள், சரித்திரம் விளக்கும் சிற்பங்கள் ஆகியன முறையே விளக்கப் படுகின்றன.

### 3. 1. சரித்திரமுரைக்கும் சான்றுகள்

சரித்திரமுரைக்கும் சான்றுகளாக விண்ணாறு, விண்ணாற்றங்கரைப்பாலம், இராஜராஜசோழனும் தஞ்சை மாமணிக்கோயிலும், நீலமேகப்பெருமாள்கோயில் கல்வெட்டுகள், பராசரமுனிவர், பராசரக்குளம், அய்யாகுமார தாததேசிகனும் அவரது வேள்வியும், சந்தியா மண்டபம் போன்ற செய்திகள் கிடைத்துள்ளன. அவற்றை தனித்தனியே விரித்து உணருவோம்.

### 3. 1. 1. விண்ணாறு

பழையனூர் என்ற பழசை என்னும் ஊரின் கண்ணே பூர்வீக சோழர்களது தண்டத்தலைவனாய் மிகச் சிறப்புற்றோங்கிய விண்ணன் என்னும் வேளாளப்பிரபு பழசைப் பிரானுக்குக் காவிரிநீர் கொண்டு அபிஷேகம் பண்ணுதற்பொருட்டுத் தன் பெயரால் ஆறு ஒன்று வெட்டினான். அதற்கு விண்ணாறு என்று பெயர்.

கண்ணாருலகில் பகீரதனும் கண்டு
கொணர்ந்தான் கங்கை யென்பார்
விண்ணாறு எளிதோ வாறுதந்த
வேளாண் குரிசில் விண்ணன் அன்றோ
தண்ணார் முள்ளியோடம் வரச்
சம்பந்தனும் செந்தமிழ் பாட
மண்ணான் செல்வம் பெருங்கீர்த்தி
வகித்தார் சோழமண்டலமே. 90
(சோழமண்டலசதகம், ப. எம். 85)

### 3. 1. 2. விண்ணாற்றங்கரைப்பாலம்

மராட்டிய மன்னர் பிரதாபசிம்மன் (1939-1763 AD) தஞ்சையை ஆண்டுவரும் காலத்தில் வீரபத்திரய்யா என்ற வாக்கேயக்காரர் விண்ணாற்றங்கரைக்கு வந்தார். சங்கீதத்தில் வல்லவராய்த் திகழ்ந்த அவரை தஞ்சை மன்னன் தமது அரண்மனைக்கு அழைத்துச் சென்று கௌரவித்ததாக வாக்கேயகார சரிதம் விளம்புகின்றது. தெலுங்கு மொழியில் அமைந்த சங்கீத சம்பிரதாயப்பிரதர்சினி கூறும் வாக்கேயகார சரிதத்தில் விண்ணாற்றங்கரை "வெண்ணேட்டிகட்டம்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 1743 முதல் 1837 வரை ஆட்சி புரிந்த தஞ்சை மராட்டிய மன்னர்களால் உருவாக்கப்பெற்ற பெரிய சத்திரங்கள் இருபதினுள் "இலட்சுமி ராஜபுரம்" எனப்படும் விண்ணாற்றங்கரைச் சத்திரம் பள்ளியக்கிரஹாரத் திற்கருகில் திகழ்வதாகும். (Madras District Gazetteers, Tanjore, P. No. 272) இதனை நிறுவியவர் இரண்டாம் சரபோஜியின் தமக்கை கணவர் (1813 கி. பி.) ஆவார். முற்காலத்தில் தஞ்சை விண்ணாற்றில் பாலம் கிடையாது. அரசாங்கத் தபால்களை இக்கரையிலிருந்து அக்கரை சேர்ப்பிக்க ஆற்றுவெள்ள மிருப்பின் நீச்சல்காரர்களை அரசு நியமித்திருக்கும். (தஞ்சை மராட்டியர்கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் ப. எண். 277) விண்ணாற்றங்கரைப் பாலமும் கி. பி. 1836ல் கட்டியிருத்தல் வேண்டும். ஆதாரம் "வீரசிம்மவரத்தினால்

சோழதேசத்தில் சிம்மாஸனத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற க்ஷத்ரியபூபாலராகிய இஸ்ஹைனஸ் ஸ்ரீமந்த்ராஜ ஸ்ரீசிவாஜி மகாராஜா சத்ரபதி சாயப் அவர்கள் இந்த பாலத்தை (ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயில் அருகில் அமைந்த பாலத்தை) மராத்திய மன்னர்களுள் கடைசி மன்னர் இரண்டாம் சிவாஜி ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாஹனசகம் 1758 ( +78- 1836 A. D ) துன்மதி வருஷத்தில் லெப்டினான்று கர்னல் மக்லோட் இரசிடென்றாயிருக்கையில் கட்டி வைத்தார்கள்" (தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள், எண் 68 பிற்பகுதி P. No. 11) வீரஸிம்ஹ வரலப்த சோளதேச ஸிம்ஹாஸனாதிஷ்ட்டித க்ஷத்ரியபூபால ஹிஸ்ஹைனஸ் ஸ்ரீமந்தராஜ ஸ்ரீசிவாஜீ மஹாராஜ சத்ரபதி ஸகேப்யாதிஹாஸாகு ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாஹன சகம் டண துர்முகி சவஸரிபடன கர்னல் மகலீனஸ்ஸீடேடயாசே வலே ஸபா தவீலா (தஞ்சாவூர் வட்டக் கல்வெட்டுகள்) என்பது விண்ணாற்றங்கரைப் பாலத்தில் அமைந்து விளங்கும் மராத்தி மொழிக் கல்வெட்டாகும். தஞ்சையை ஆண்ட சிவாஜி மன்னரது பூஷண பத்திரத்தில் "ஸ்ரீமத்வீரஸிம்ஹ கருணாகடாக்ஷ லப்தஸுப்ரதாபாஸாதித தில்லீ சதுர்பாகஸ்வாதந்த்ர்ய (சக 1756 +78= 1834 A.D.)ஜய. வை. சு. 7. குரு வாரி- மோடி ஆவணம், தமிழாக்கம், தொகுதி. 11/190. சி/ப. எண். 9) என்ற ஒரு சொற்றொடர் காணக் கிடைக்கிறது. விண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி, ஆகிய நான்குபாலங்களையும் நிறுவியவர் இரண்டாம்சிவாஜி மன்னர். அதற்கு திருவையாறு காவிரி (அகண்ட காவேரியில் அணைக்கட்டு, இவ்வருடம் காவேரி நதியில் அதிக வெள்ளம் வந்து அணைக்கட்டு உடைந்து போயிற்று அதைக் கட்டுவதற்கு இன்று வரையிலும் தஞ்சாவூர் சக்கரம் 70000 செலவாகியிருக்கிறது. இன்னும் அணைக்கட்டு பூர்த்தியாவதற்கு ஒரு லட்சம் ரூபாய் வரையில் செலவாகும். Thanjavur Sarasvati Mahal Journal, V. 33, மோடிப் பலகணி, 105.12.1776) பாலத்தின் நடுவில் கிழக்குச்சுவரில்

காணப்பெறும் இந்த This Bridge was erected at the expence of His Highness Maharajah Sivajee Rajah of Tanjore A.D. 1846-47 Sir H. O. Montgomery Bart and J.F. Bishop Esq. officiating Residents captain E. Law for dolvilengineer His Highnes shasthus, Four Bridges, completed the communication between Tanjore and Trivaiyar for the public good at an expence of 71,000 Rupees, B. Crutch field, Sc. Trichinopoly. *(தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள், எண். 69, P. No. 109)* கல்வெட்டே சாட்சி, விண்ணாற்றங்கரை உள்ளிட்ட நான்கு பாலங்களை அமைக்கும் போது விண்ணாற்றங்கரைப் பாலத்தில் மட்டுமே "வீரசிம்ம வரத்தினால் சோழ தேசத்தில் சிம்மாஸனத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற க்ஷத்திரிய பூபாலர்" என்று தம்மைக் கூறிக்கொள்வதாலும் ஸ்ரீமத் வீரஸிம்ஹ கருணாகடாக்ஷம் பெற்றுள்ளதைக் குறிப்பிடும் பூஷணபத்திரச் சொற்றொடராலும் அச்சுதப்பநாயக்கரின் *(1560-1614 A.D. )* காலத்தில் சிங்கப்பெருமாள் என அழைக்கப்பெற்ற இந்த எம்பெருமானே (இரண்டாம்) சிவாஜி மன்னரால் *(1832-1855 A.D.)* வீரநரசிங்கப்பெருமாள் என்றழைக்கப்பட்டிருக்கலாம்.

### 3. 1. 3. இராஜராஜனும் தஞ்சை மாமணிக்கோயிலும்

தஞ்சபுரி விஷ்ணு ஆலயங்கள் பண்டு வம்புலாஞ்சோலையில் இருந்தமைக்கு "வம்புலாஞ்சோலை மாமதிள் தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி நம்பிகாளுய்ய நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" என்ற திருமங்கை மன்னனின் பெரிய திருமொழிப்பாடலே சிறந்தொரு சான்று. அச்சான்றுக்கு துணை நிற்பது விண்ணாற்றங்கரை மணிக்குன்றப் பெருமாள் கோயிலில் விளங்கும் "தஞ்சாவூர் கூற்றத்து தஞ்சை மஹாமணி" என்று பொறிக்கப்பெற்றுள்ள சாஸனவரி. மேலும் தஞ்சை மாமணிக் கோயிலின் (விண்ணாற்றங்கரைத் திருத்தலத்தின்) தொன்மையைப் பறைசாற்றுகின்ற வகையில் தளிச்சேரி பெண்டுகளுக்கு சம்பளமும் வீடும் அளித்த குறிப்பொன்று தஞ்சை பெரியகோயில் திருச்சுற்றில் வடபுறச்சுவற்றில் வெளியில்

கல்வெட்டுச் சாஸனமாகக் காணக் கிடைக்கின்றது. தளிச்சேரி என்பது முறையே தஞ்சை பெரியகோயிலுக்கு தெற்கு, வடக்கு, பின்புறமென்று மூவகைப்பட்டிருக்கும். தெற்கு தளிச்சேரித் தென்சிறகில் 92 வீடுகளும், வடசிறகில் 92 வீடுகளும், வடக்கு தளிச்சேரி தென்சிறகில் 95 வீடுகளும், வடசிறகில் 96 வீடுகளும், தளிச்சேரி என்று மட்டுமே குறிப்பிடப்பெறும் பின்புறத்தில் 25 வீடுகளும் அமையப்பெற்றிருக்கும். அவ்வகையில் ராஜராஜீச்வர முடையார் தளிச்சேரிப்பெண்டுகளாகச் சோழ மண்டலத்துத் தளிச்சேரிகளில் நின்றுகொண்டு வந்து ஏற்றின தளிச்சேரி பெண்டுகளுக்கு ...... ஆடவல்லான் என்னும் மரக்காலால் நெல்லு நூற்றுக்கலமாகவும், மாதச்சம்பளமும், வசிக்க வீடுகளாகத் "தெற்கு தளிச்சேரித் தென் சிறகில்" ஐம்பதொன்றாம் வீடு தஞ்சாவூர்த் தஞ்சை மாமணிக் கோயில் நக்கன் வீரசோழிக்குப் பங்கு ஒன்றும், தெற்கு தளிச்சேரி வடசிறகில் இருபத்தைந்தாம் வீடு தஞ்சாவூர்த் தஞ்சை மாமணிக்கோயில் நக்கன் மாதேவிக்குப் பங்கு ஒன்றும், வடக்கு தளிச்சேரி தென்சிறகில் அறுபத்துமூன்றாம் வீடு தஞ்சாவூர்த் தஞ்சைமாமணிக்கோயில் நக்கன் வழுவா நிலைக்குப் பங்கு ஒன்றும், வடக்கு தளிச்சேரித் தென் சிறகில் தொண்ணூற்று மூன்றாம் வீடு தஞ்சாவூர்த் தஞ்சை மாமணிக்கோயில் நக்கன் திருவழுகுக்குப் பங்கு ஒன்றும், தஞ்சாவூர்த் தஞ்சை மாமணிக்கோயில் நக்கன் வீரசோழ அணுக்கன் பராந்தகன் வீமனுக்கு பங்கு முக்காலும்" தளிச்சேரிப் பெண்டிர் போன்றோருக்குத் தஞ்சையை ஆண்ட மன்னன் ராஜராஜசோழன் 1 (985-1014 A.D.) அளித்திருக் கின்றான். (தென்னிந்தியக் கோயில் சாஸனம் தொகுதி 2, பகுதி 3 & சிவபாதசேகரனின் தஞ்சைக் கல்வெட்டுகள்) இதனால் ஐந்து முறை தஞ்சை மாமணிக்கோயிலை இராஜராஜசோழன் சுட்டியிருப்பது அறிய முடிகின்றது.

தஞ்சாவூர்த் தஞ்சை மாமணிக்கோயிலான பழைய தளிதேவர்க்கு திருநொந்தாவிளக்கு திருப்பணியைக்

குறிப்பிடும் கல்வெட்டுச் சாஸனமும் தஞ்சாவூர் நூலில் (ப. எண். 110 & 111) குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் தஞ்சை மாமணிக் கோயிலுக்கு காடவன் மாதேவிச் சதுர்வேதிமங்கலம் என்ற மற்றொரு பெயருமுண்டு.

### 3. 1. 4. ஸ்ரீநீலமேகப் பெருமாள்கோயில் கல்வெட்டுகள்

தஞ்சை விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயிலில் முழுமையான இரு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. அவை சுமார் 200 ஆண்டுகள் பழமையானவை. ஸ்ரீநீலமேகப்பெருமாள் கோயிலில் 1870ஆம் ஆண்டு கருட மண்டபம் தள வரிசை ஆகியவற்றை தன் சொந்த செலவில் தஞ்சாவூர் மென்னூல் ரெங்கசாமி பிரமோதூத வருடம், ஐப்பசி மாதம் 29 ஆம் தேதி கட்டி திருப்பணி செய்துள்ளார் என்பதை விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேகப்பெருமாள் கோயில் கருடமண்டபக் (1 "ஸ்ரீனீலமேக பெருமாள கோவிள சன்னதியில கெருடமணடபம 15 அங்கணமும் தளவரிசையும உளபட மண்டப கட்டட தர்மத்தை தஞ்சாவூரிலிருக்கும் மென்னூல ரெங்கசாமி தன் சொந்தத்தில் கட்டி முடிந்து பிறமொதூத வ அறபபசி மீ 29 ஆம் தேதி 1870 நவம்பர் மீ 10 ஆம் தேதி") கல்வெட்டு கூறுகிறது. விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயிலின் வேதாந்த தேசிகர் சந்நிதி கல்வெட்டு தஞ்சை அரண்மனை தேவஸ்தானங்களின் ஆதீனஸ்தரும் கர்த்தரவர்களுமான ஸ்ரீ காமாக்ஷியம்பாபாய் அவர்களின் கட்டளைப்படி 1886 ஆம் ஆண்டு மேற்கொண்ட மேலசிங்கப்பெருமாள் கோயில் திருப்பணிகளையும், 1889ஆம் ஆண்டு மேற்கொண்ட ஸ்ரீநீலமேகப்பெருமாள் கோயில் திருப்பணிகளையும் குறிப்பிடுகின்றது. இரண்டுகோயில்களின் திருப்பணிகளுக்கும் இடையே மூன்று ஆண்டுகள் இடைவெளியிருந்த போதிலும் இரு கோயில்களின் திருப்பணிகளையும் சேர்த்து ஸ்ரீநிகமாந்தமகாதேசிகன்

சந்நிதியில் முகமண்டபத்தூண் உத்திரத் தாங்கிகள் இரண்டினில் (கல்வெட்டு 2A, சந்நிதியின் வலது புறப்பாதி) கலி 4990 (3101- 1889 A.D. ) சகம் (1811+78=1889 A.D.) ...... மாஸம் தேதிக்கு ஸர்வதாறி வருடம் ........ மாஸம் தேதி தஞ்சாவூர் அறமனையிலிருக்கும் ஹிஸ்லேட்டு ஹைநெஸ் ஸ்ரீ சிவாஜி மஹாராஜா ஸாகேப் அவர்களுடைய ஜ்யேஷ்ட்டபத்தினியும் ஷெ இலாகா தேவஸ்தானங்களின் ஆதீனஸ்தரும் விசாரணைக் கர்த்தரவர்களுமான ஹர்ஹைநெஸ் மாது ஸ்ரீ காமாக்ஷியம்பாபாயி ஆக்ஞெயின் பேறில் ஏஜெண்டு நாகராஜறாமாஜி பண்டிதரால் ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோவிலில் அறகுறயாயிருந்த மதிளைப் பூர்த்தியாகவும் பிராகாரம் கெருட மண்டபம் தாயார் ஸன்னிதி மண்டபமுள்பட (கல்வெட்டு 2B இடது புறப்பாதி) செங்கல்லாலான தளவரிசையும் 2 அங்கணத்தில் முப்பத்தியில் வெள்ளக் கல்லுநால் மட்டப்பாகு (செய்து) வஸந்த மண்டபத்தையும் கட்டி அதில் ஷெ கோவிலில் அநாதியாய் பூஜிக்கப்பட்டு வருகிற ஸ்ரீவேதாந்ததேசிகர் சந்நிதியும் பிரதிஷ்டை செய்யப்பட்டுமிருக்கிறது. 2. ஸ்ரீ மேலசிங்கப்பெருமாள் கோவிலில் அறகுறயாயிருந்த மதிளைப் பூர்த்தியாகவும் பிறாகாரத்தை செங்கல்லால் தளவறிசையும் யாகசாலைக் கட்டடமும், 9 அங்கணத்தில் முப்பத்தியில் வெள்ளக் கல்லுநால் மட்டப்பாகு வேலை செய்து வஸந்த மண்டபத்தையும் கட்டி அதில் ஸ்ரீதிருமங்கையாழ்வாரை 1886 ஆம் ஆண்டு டிசம்பர் மாஸம் ஏழாம் தேதியில் பிரதிஷ்ட்டை செய்யப்பட்டும் இருக்கிறது) இதனை ஓரே தொடர் கல்வெட்டாக நாட்டியுள்ளனர். (இது இந்நூலாசிரியரால் நேரில் பார்த்து படி எடுக்கப்பட்டது) இதனால் ஸ்ரீமேலசிங்கப்பெருமாள், ஸ்ரீநீலமேகப்பெருமாள் கோயில்களின் வசந்தோத்ஸவங்களும், வஸந்த மண்டபங்களின் பிரதிஷ்ட்டையும் அவற்றில் முறையே ஸ்ரீதிருமங்கையாழ்வார், ஸ்ரீ நிகமாந்தமகாதேசிகன் சந்நிதி

களின் நிர்மாணமும் அறியப்பெறுகின்றன. ஸ்ரீ சிங்கப்பெருமாள் கோயிலின் யாகசாலைக் கட்டடம், செங்கல்லாலான பிரகார தளவரிசை, மதில் திருப்பணி ஆகியவற்றுடன் ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயிலின் கருட மண்டபம், தளவரிசை போன்ற திருப்பணிகளையும் இக்கல்வெட்டால் அறிய முடிகின்றன.

இக்கல்வெட்டுகளுள் கல்வெட்டு எண். 1- னைப் பற்றிய குறிப்பு தஞ்சை திருக்கோயில்கள் நூலில் (ப. எண். 41ல்) காணலாம். கல்வெட்டு 2A, 2Bயினை குடவாயில் Dr. M. பாலசுப்பிரமணியம் பார்த்துள்ளார். படியெடுப்போ, பதிப்போ மேற்கொள்ளவில்லை என்பது அவர் எழுதிய தஞ்சாவூர் (ப. எண். 152 & 153) நூலிலிருந்து புலனாகிறது. விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேகப்பெருமாள் சந்நிதியில் உள்ள இராமானுஜர், இராமானுஜரின் அருகில் நின்ற கோலத்தில் விளங்கும் கூரத்தாழ்வார் மற்றும் ஆழ்வார் பதின்மர் சிலைகளும் பிற்காலத்தவை. (நாலாயிரதிவ்யப் பிரபந்தம்,ப. எண். 814, தஞ்சாவூர்,ப. எண். 153 & சந்தியா மண்டபமும் சிங்கப்பெருமாள் திருப்பணியும், ப. எண். 90, ஸ்ரீந்ருஸிம்மப்ரியா 3/2009)

**3. 1. 4(A). இந்தி மொழிக்கல்வெட்டு. இடம்: தாயார் சந்நிதி முன்மண்டபம் மற்றும் முன்மண்டபத் தூண்கள், தஞ்சை ஸ்ரீநீலமேகப்பெருமாள்கோயில், விண்ணாற்றங்கரை.**

ஸ்ரீ செங்கமலவல்லித்தாயார் சந்நிதியில் ஸ்ரீ நீலமேக திவ்யதேச (சரண்யநகர) வெண்ணார் பேங்க் மேம் ஸ்ரீ செங்கமல வல்லி (அருணகமல நாயகீ) லக்ஷ்மீஜீ கே இஸ் மந்திர் கோ ஜீர்ணோத்தார் ஔர் மஹாமண்டப கா நிர்மாண் ஸ்ரீமத் உத்தர அஹோபில் ஜால்ரியா மடாதிபதி ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமீ ஸ்ரீவீரராகவாசார்யஜீ கீ ஆக்ஞாஸே ஸ்ரீமான் மஹனிராம்குமார் பாங்கட் டீட்பனா (ராஜஸ்தான்) நிவாஸீ நே கராயா" (விக்ரம ஸம்வத் 2019, ஸன் 1962 இஸ்வீ,

கோவிந்தலால் பாங்கட் & கோகுல் தாஸ் பாங்கட்) என்று காணப்பெறும் இந்தி மொழிக்கல்வெட்டால் உத்தர அஹோபிலமடாதிபதியின் கட்டளையால் தனிக்கோயில் தாயார் சந்நிதி பழுது பார்க்கும் திருப்பணியும், மஹாமண்டப நிர்மாணமும், 1962 A.D.யில் நடத்தப்பெற்றமை அறிய முடிகிறது. இவ்வாண்டிலேயே விண்ணாற்றங்கரை ஸ்ரீ சிங்கப்பெருமாள் கோயிலில் நூதனமாக ஆண்டாள் சந்நிதிப் பிரதிஷ்ட்டையும் ஷை யாராலேயே செய்யப்பட்டும் (அதற்கான ஹிந்தி கலவெட்டு முன்மண்டப முகப்புக் கூரையில்) உள்ளது.

### 3. 1. 5. துவஜஸ்தம்பப் பிரதிஷ்டை

ஸ்ரீ நீலமேகப்பெருமாள் கோயிலில் துவஜஸ்தம்பம் இல்லாதிருந்து 1936 ஆம் ஆண்டு நூதன துவஜஸ்தம்பப் பிரதிஷ்ட்டையை ஸ்ரீரங்கம் ஸ்ரீ மதாண்டவன் ஸ்ரீ நிவாஸ மஹாதேசிகன் மேற்கொண்டு அக்குறையை நிறைவேற்றி வைத்தார். அது சமயம் 10-1-1936 முதல் 20-3-1936 ஈறாக லக்ஷார்ச்சனை வைபவமும் அந்த ஸ்வாமியால் நிகழ்த்தப் பெற்றது. இச்செய்தி விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயில் துவஜஸ்தம்ப குறிப்புகளாலும், தஞ்சை திருக்கோயில்கள் நூலாலும் அறியப் பெற்றது. ஸ்ரீ சிங்கப்பெருமாள் கோயில் துவஜஸ்தம்பப் பிரதிஷ்டை 1938 ஆம் ஆண்டு நடைபெற்றதை தஞ்சை திருக்கோயில்கள் நூல் தெரிவிக்கின்றது.

### 3. 1. 6. பராசர முனிவர்

விண்ணாற்றங்கரை நீலமேகப்பெருமாள் கோயிலின் கருவறையில் எம்பெருமானுக்கு அருகில் நின்ற திருக்கோலத்துடன் அமையப்பெற்றவர் பராசர முனிவர். இவருக்கு எம்பெருமான் காட்சி கொடுத்ததால் இத்தலம் பராசரக்ஷேத்திரம் என்று போற்றப்படுகிறது. இந்த பராசர க்ஷேத்திரம் மணிமுக்தா நதிக்கரையில் (வடவாற்றங்கரையில்) அமைந்து விண்ணாற்றங்கரைக்கு இடம்பெயர்ந்தபோதிலும்

பழமை மாறாது பராசரக்ஷேத்திரம் என்றே அழைக்கப் பட்டமைக்கு சான்றாக புலவர் செ. இராசு அவர்களின் 'தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள்' என்னும் நூலில் செய்தியும், பின்னிணைப்பாக கல்வெட்டும் கொடுக்கப்பட் டுள்ளது. அஃது இத்தல வரலாற்றிற்கு ஆதாரமாக விளங்கும் சிவராம் பள்ளிப்படை கல்வெட்டாகும். இதன் விளக்கம் முன்னுரையில் விவரிக்கப்பட்டுள்ளது. மேலும் சிங்கப் பெருமாள் கோயிலில் காணப்பெறும் மராத்தி மொழிக் கல்வெட்டு அக்கோயிலை மேலசிங்கப்பெருமாள் என்று சுட்டுவதாலும் தஞ்சையாளியைப் பொன் பெயரோன் நெஞ்சமன்றிடந்தவனையும், மணிக்குன்றனையும் சேர்த்துத் திருமங்கை ஆழ்வார் ஒரே பெரிய திருமொழிப்பாடலில் (7-3-9ல்) குறிப்பிட்டுள்ளதாலும் நாயக்கர் காலத்து நூலான தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சியில் (ப. எண். 4, பாடல் எண் 2ல்) சிங்கப்பெருமாள் மணிகண்டப்பெருமாள் என்று அடுத்தடுத்துக் கூறியிருப்பதாலும் அவ்விரண்டு கோயில்களும், விண்ணாற்றங்கரை நீலமேகப்பெருமாள் கோயிலும் பண்டு தஞ்சை மேற்கு பகுதியில் அமைந்திருந்தமை புலனாகிறது. மோடி ஆவணத்தில் (கோடா பாஹேர் சந்தியானமண்டபாசே காண்டீ நவீதேஹலேம்பந்திடா தீத்யாசே காமகாரீஸ் நாரளி சி ஜோண்ட் 8 நீலமேக ஸ்வாமீ சே தேஹலாஸ் த்ரிவாதின கல்யாண மாஹாந்தூண் தேணே, மணிகொண்ட பெருமாள் ஸ்வாமீ சே தேஹலாஸ் 8 ஜாண்டீ தேணே) "கோட்டையின் வெளியில் விண்ணாற்றங்கரையில் புதிதான கோயில்களைக் கட்டுகிறார்கள். அந்த வேலைக்காக தென்னை மரங்கள் எட்டினை நீலமேகஸ்வாமியின் கோயிலுக்குக்காகத் திருவையாறு கல்யாண மகாலிலிருந்து (கல்யாண மகால் மாளிகை தஞ்சை மராட்டிய மன்னர் இரண்டாம் சரபோஜி (1798-1832 A.D.) அவர்களால் 1824ல் கட்டப்பெற்றது என தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள் நூல் தெரிவிக்கின்றது.

அதுவே தற்போது திருவையாறு அரசர் கல்லூரியாக விளங்குகிறது. அங்கிருந்து) கொடுக்கிறது. எட்டு மரங்களை - மணிகண்டப்பெருமாள் ஸ்வாமியின் கோயிலுக்குக் கொடுக்கிறது" என்கிற குறிப்பின் அடிப்படையில் அத்தலங்கள் மராத்திய மன்னர் காலத்தில்தான் விண்ணாற்றங்கரைக்கு இடம் பெயர்க்கப்பட்டன என்பது தெளிவாகின்றது. தஞ்சபுரீச்வரர் எனும் சிவபெருமானின் தேவாலயமும் பிற்காலத்தில் விண்ணாற்றங்கரைக்கு இடம்பெயர்க்கப் பட்டிருக்கலாம் என்பது கீழ்க்காணும் செய்தியின் மூலம் தெரிய வருகிறது. This tradition is perpetuated by the temple of Sri Thanjapurisvara and Anandavalli Amman and the temple of Sri Neelameghapperumal originally built in Vambulamsolai and latter removed to the Vennar two miles north of the city என்று தஞ்சாவூர் பெரியகோயிலைப் பற்றிய நூலொன்று தெரிவிக்கின்றது.

### 3. 1. 7. பராசரக் குளம்

வம்புலாஞ்சோலையிலமைந்த நீலமேகப் பெருமாளின் புஷ்கரிணீ பராசரர் குண்டம் எனவழைப்பதற்குரிய மோடி ஆவணம் மற்றும் தமிழாக்கத்தை முறையே இனிக் காண்போம். "யாதி தேவஸ்தான விஜயதசமி ஸ சிலங்கணாஸ ஜாவுன யாவயாஸ கில்யாபாரேரீலதேவலேம் 1. மேலசிங்கப் பெருமாள், 2. நீலமேகஸ்வாமி, 3. மணிக்குன்ட(ரப்) பெருமாள் ஸன்னாரானி சீநிதூன பராசரகுன்டயா சே காடிதே வானீயேவூன் ஸிலங்கணக பரதூன ஜாவயாஸ நிரோபஹோணா". என்று மோடி ஆவணம் (தஞ்சை மராட்டியர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும், ப. எண். 222) குறிப்பிடுகிறது. தேவஸ்தானத்தில் விஜயதசமி தினம் சிலங்கணத்திற்குச் (அம்புபோடும் இடத்திற்குச்) சென்று வருவதற்கு கோட்டைக்கு வெளியிலுள்ள கோயில்கள் மேலசிங்கப்

பெருமாள், நீலமேக ஸ்வாமி, மணிக் குன்றப்பெருமாள் ஸன்னா ஸவாரியுடன் புறப்பட்டு பராசரர் குளத்தின் கரைக்கு ஸ்வாமி வந்து சிலங்கணம் (அம்பு போடுதல்) செய்து திரும்பிப் போகுவதற்கு உத்திரவிட வேண்டும் என்பது அதன் தமிழாக்கமாகும். (தஞ்சை மராட்டியர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும் தொகுதி, ப. எண். 424)

மேலும் (வம்புலாஞ்சோலை) பராசரர்குளத்திற்கு விண்ணாற்றங்கரை நீலமேகப்பெருமாள் அவரது பிரஹ்மோத்ஸவத்தீர்த்தவாரி நாளன்று எழுந்தருளுவதற்கு நீலமேகஸ்வாமி யாதி தேவஸ்தான, கோட்டை, தஞ்சாவூர் (சுஹர்சன் 1200+599-1700 A.D. ) தஞ்சாவூர் தேவஸ்தானத்தைச் சேர்ந்த கோட்டைக்கு வெளியிலுள்ள விஷ்ணுஸ்தலம் ஸ்வாமிக்கு வைகாசி மாதம் நடக்கும் ரதோத்ஸவத்திருநாள் நடக்கும்படி (சால்குத்தகா) வருடாந்திர முறைப்படி இந்த திருநாளைக்குச் சாமான்கள் வந்து சேரும்படி தஞ்சாவூர் கோட்டை ஜகாயதிலிருந்து உத்திரவு செய்ய, 100 மூங்கில், 1000 கீற்று, 11/2 மூட்டை (கொட்டை முத்து) விளக்கு எண்ணெய், 2 குவளை நல்லெண்ணெய், 1 தோண்டிநெய், 500 கொட்டைப்பாக்கு, 200 தேங்காய், 100 வாழைப்பழம், 1 சில்லரைபடிக்கட்டளைச் சாமான்கள் போன்றவை வைகாசி மாதம் 20 ஆம் தேதி முதல் 23 ஆம் தேதி வரை, ஸ்வாமி தீர்த்தம் கொடுக்கும் நாள் அன்று பராசரர் குளத்திற்கும் செல்ல ஸ்வாமிக்கு அரிசி எண்ணெய் போன்ற சாமான்கள் வரும்போது தடைசெய்யாமல் இருக்க தஞ்சாவூர் கோட்டை ஜகாயதிலிருந்து உள்ளூர் ஜகாயதிக்கு உத்தரவிட" அனுமதி கோரும் மோடி ஆவணம் சான்றாக அமைகின்றது. ( தஞ்சை சரசுவதிமஹால்-ஆட்சியர் அலுவலக மோடி ஆவணம் மூட்டை எண் 45/181 A, இச்செய்தி இந்நூலாசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டது)

### 3.1. 8. அய்யா குமாரதாததேசிகனும் அவரது வேள்வியும்

ஸ்ரீ அய்யா குமாரதாததேசிகன் விஷ்ணுவிருத்தகணம் என்று சொல்லப்படும் சடமர்ஷணகோத்திரம், நாத யாமுன-

ஸ்ரீசைலபூர்ண -குருகாதீசர் முதலான பரமதேசிகர்களின் ஔரஸவம்சத்தில் ஸ்ரீநிவாஸதாதாசார்ய ஸ்வாமியின் பௌத்திரனாகவும் வேங்கட தேசிகனுக்கு திருக்குமரராக வைகாசி ரோஹிணியில் அவதரித்தார். தஞ்சை நாயக்க மன்னரின் குலகுருவாயும், ஆஸ்தான வித்வானாகவும், எழுந்தருளியிருந்தார். இவரைப் பற்றி நீலகண்ட தீக்ஷிதர் தன் கிரந்தத்தில் "ஷட்தர்சினி ப்ரவீணா: குமாரதாததேசிகா:" என்று உதாஹரித்துள்ளார். இவர் சுதர்சன அனுக்ஹத்தால் ஜ்ஞானைச்வர்யத்தைப் பெற்றவர். பாரிஜாதாபஹரணம், நிக்ஷேபரக்ஷாவ்யாக்யா, ஸ்ரீபாஷ்யவ்யாக்யா, விசிஷ்ட்டாத்வைதசரணி, பஞ்சகாலக்ரியா தீபிகா, உஷா அநிருத்தம், ராமாயணகதாசாரம், ஸூத்ரகல்பபாஷ்யம், வியாகரணதீபிகா, கணாதபரிபாடீ, கபிலதந்த்ரசாரம், அபய பிரதானஸார உரை போன்றவை இவர் இயற்றிய நூல்கள். (தேசிகன் 7வது நூற்றாண்டு நிறைவு மலர் 1968, ப. எண். 470)

அர்ச்சாதிருமேனியில் கோயில் கொண்டுள்ள இவரை திருக்குடந்தை ஆராவமுதனின் நாயகியார் ஸ்ரீகோமளவல்லி நாச்சியார் திருச்சந்நிதி முன்பு நாம் கண்டு வணங்கலாம். இவருக்குப் பின் இந்த குரு ஸ்தானத்தை அலங்கரித்த ஸ்ரீலக்ஷ்மீநாராயணர் என்பவரால் ஸ்ரீஅய்யா குமாரதாத தேசிகனின் திருக்கோயில் ஸ்ரீ கோமளவல்லித் தாயார் கனவில் கொடுத்த கட்டளையின் பேரில் கோமளவல்லித் தாயார் சந்நிதி முன்பு நிறுவப்பெற்றது. ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணர் தமது குருவின் கடாக்ஷத்தால் பேறு பெற்றதை நினைத்து "அய்யா குமாரதாத தேசிக சம்பாவனை, அய்யா குமாரதாததேசிகன் வைபவ பிரகாசிகை" என்ற இரண்டு குறுநூல்களை இயற்றியுள்ளார். அவை இரண்டும் ஸ்ரீ அய்யாகுமாரதாத தேசிகன் இயற்றிய பாரிஜாதாபஹரண நாடகத்தின் முன்னுரையில் (தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, ப. எண். 21-24ல்) காணக் கிடைக்கின்றன.

நாயக்கமன்னர்களின் உதவியால் ஸ்ரீகுமாரதாத தேசிகன் பழுதடைந்த சோழதிவ்யதேசங்களை யெல்லாம் புனருத்தாரணம் செய்தார். ஆதலால் ஸ்ரீ குமாரதேசிகனுக்கு ஆலயம் தோறும் முதல் மரியாதையும் தஞ்சை விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேக ஸ்வாமி சந்நிதிக்கருகில் வசிப்பிடமும் ஏற்படுத்தப்பட்டன. இவர் ஒவ்வொரு ஆண்டும் வஸந்த ருதுவில் (சித்திரை-வைகாசி மாதங்களில்)ஸாங்க தர்சபூர்ண மாஸம், ஜ்யோதிஷ்ட்டோமம், உக்த்யம், அதிராத்ரம், அப்தோர்யாமம், ஷோடசீ, வாஜபேயம், அக்னிசித்யம், பௌண்டரீகம் போன்ற யாகங்களைப் புரிந்தார். இவை யாவும் தஞ்சை-விண்ணாற்றங்கரை ஸ்ரீ நீலமேகப் பெருமாள் கோயிலிலே நடைபெற்று வந்ததால் ஸ்ரீ நீலமேகப்பெருமாளுக்கு கண்டருளப்பண்ணிய பிரசாதத்தையே வேள்விகளுக்கு அவியுணவாக அளித்து மகிழ்ந்தார் ஸ்ரீஅய்யாகுமாரதாததேசிகன். இவரது காலத்தில் பல்வேறு அக்கிரஹாரங்கள் தோற்றுவிக்கப்பட்டன. அவற்றுள் ரகுநாதபுரம் (இது தஞ்சையை அடுத்துள்ள திட்டை), பௌண்டரீகபுரம் (ஒப்பிலியப்பன் கோயிலுக்குக்கருகில் அமைந்த ஏனாதிமங்கலம்) என்பன சோழ நாட்டில் திகழ்பவை. இவற்றின் விளக்கம் ஸ்ரீரங்கநாதபாதுகா ப. எண். 97, 11/2007 & ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா ப.எண். 52, 3/2008 லும் கண்டுகொள்க.

மேலும் கோபாலார்ய மகாதேசிகன் எனும் திருக்குடைந்தை தேசிகன் தஞ்சை மாமணிக்கோயில் எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்துள்ளார். தஞ்சைக்கு விஜயம் செய்த அகோபிலமடத்து அழகியசிங்கர் கீழராஜவீதி விட்டோபாபஜனை சாலையிலும் ஒரு சமயம் விண்ணாற்றங்கரைக்கு எழுந்தருளி தங்கியிருந்தமைக்கும் தக்க சான்றுகள் கிடைத்துள்ளன.

### 3. 1. 9. சந்தியா மண்டபம்

விண்ணாற்றங்கரை என்பது தஞ்சாவூர் அரண்மனை மோடி ஆவணங்களில் சந்தியா மண்டபம் என்றே

அழைக்கப்படுகிறது. விண்ணாற்றினை சந்தியா மண்டபநதி என அழைப்பதையும் (1779, மணிகண்டப் பெருமாள்கோயில் சந்தியாமண்டபம் நதியின் கரை சீர்படுத்த தஞ்சாவூர் சக்கரங்கள் 50, தஞ்சை மராட்டியர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும், ப. எண். 153) ஆண்டு தோறும் ஆடித்திங்கள் உத்திர நன்னாளில் சந்தியா மண்டப நதியில் தீர்த்தவாரி கண்டருள தஞ்சைப் பெருஉடையார் விஜயம் செய்ததையும், (46.1786/(15) துளஜாராஜாவின் உத்திரவு, பெரியகோவில் ஸ்வாமி ஆடி மாதத்தில் உத்திரம் நக்ஷத்திரம் உற்சவத்திற்காக தீர்த்தம் கொடுக்க விண்ணாற்றங்கரைக்குப் போகுவதால் வெடிமருந்து தயார் செய்கிறது. தஞ்சை மராட்டியர் மோடி ஆவணத்தமிழாக்கமும் குறிப்புரையும், தொகுதி,1. ப.எண்-286) தஞ்சை மராத்திய இராணிமார்கள் துலா காவேரி ஸ்நானத்தினை சந்யா மண்டப நதியில் மேற்கொண்டதையும் (மோ. ஆ-யாதி மஹால ஜகாதி கோட தஞ்சாவூர் ரா. மஹாராஜ. ஸா. வ. ஸௌமா. பாயீஸாஹேப் தரோபஸ்த ஸந்த்யானமண்டபநதி ஸதுலாகாவேரீ ஸ்நானஸகேல்ய் பதல் ஜகாயாதீ மஜகூரபை கீதில்யாபாபத...) (9)1797 மகால் ஜகாயதி கோட்டை தஞ்சாவூர் ரா. மகாராஜாவும் (அமர்சிங்) எல்லாபாயி சாகேப்களும் விண்ணாற்றங்கரைக்கு ஐப்பசி மாதம் ஸ்நானத்திற்குச் சென்றபோது சாப்பாடு செய்யப்பட்டதின் விபரம்............ (தஞ்சை மராட்டியர் மோடி ஆவணத்தமிழாக்கமும் குறிப்புரையும் தொகுதி: 1, ப.எண். 452) மோடி ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. விண்ணாற்றங்கரையைச் சந்தியா மண்டபம் என்றும், சந்தியா மண்டபம் அமைந்த இடத்தினையும் சுட்டுகின்ற கல்வெட்டு (இந்நூலாசிரியரால் நேரில் பார்த்து படியெடுக்கப்பட்டது) ஸ்வஸ்திஸ்ரீ ந்ருபசாலிவாஹன சகம் 1779(+78=1857 கி.பி.) பிங்கள ஸம்வத்ஸரமார்கசீர்ஷசுத்த 12 ஸ்திரஸ்ரீரிகுஜர ஸுப்பராய மேஹானாசி ஸ்திர ஜயகுபேரபாஇ ஸந்த்யா மண்டப லக்ஷ்மணநாஇகாசே அக்ரஹாராந்த வெங்கட .... என்று விண்ணாற்றங்கரை ஜோகர்பாய்கல்யாண மண்டபத்தில் காணக்கிடைக்கின்றது. விண்ணாற்றங்கரையில் சந்த்யா

மண்டபம் சுந்தரேசர் திருக்கோயில் (திருத்தலப்பெருமை, தஞ்சைத் திருக்கோயில்கள்) கருவரை விமானத்துடன் புல்மண்டிப் பொலிவிழந்து காட்சி தருகிறது. ஒரு காலத்தில் பெரியகோயிலாய்க் கொண்டு சந்தியா மண்டபம் சுந்தரேசர் இங்கே திகழ்ந்த காரணத்தால் இந்த விண்ணாற்றங்கரை சந்தியாமண்டபம் என்று அழைக்கப் பட்டிருக்கலாம். சந்தியாமண்டப ஆவுசாஹிப் தோட்டம் - 86/2, சந்தியா மண்டபத்தோட்டம் - 102/12, சந்தியாமண்டபபங்களாத் தோட்டம்-102/16 போன்ற குறிப்புகளை தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் (T.M.S.S.M.L.Thanjavur, T. 7615) நூல் தருகின்றது. சந்தியா மண்டபத்தைக் குறிப்பிடும் குஜிலி சத்திரமே (1. மோ. ஆ.-116. 1849(2) குஜர ராமநாதபட்டாசே குஜராதீனேஸர்காராஸ த்ரிவாதீந்தீல மண்டப, ஸந்த்யான மண்டப படதோரா பங்களாவகைரே கரிதீஸ ரூ 6000. (பொருள்) குஜிலி இராமனாதபட்டரின் மூலமாக சர்காருக்குத் திருவையாறிலுள்ள மண்டபம், படித்துறை, பங்களா வகையறாக்களை வாங்குவதற்கு ரூ. 6000, 2. மோ. ஆ. குஜரராமநாதபட்டா சே குஜராதீனே ஸரகாராஸ த்ரிவாதீந்தீல கர. பாகவத ஸந்த்யான மண்டப பங்களா, படதோரா வகைரே கரிதீ பதலரூபயே வசகட பைகீ. 16611-8-0. (பொருள்) குஜராத்தி இராமனாதபட்டர் மூலம் சர்காருக்கு திருவையாற்றில் வீடு, தோட்டம், பங்களா, படித்துறை வகையறா கரீதி செய்யவசக்கட்டிலிருந்து, 16611-8-0. ரூ. 3. மோ. ஆ. (5) 1248. சோமநாத சதாசிவ பண்டிதருடைய 1. திருவையாற்றில் கல்கி அக்கிரஹாரத்திலுள்ள மண்டபம், தோட்டம், நிலம் வகையறா 1. விண்ணாற்றங்கரையில் படித்துறை, பங்களா இவ்விரண்டையும் குஜிலி ராமநாதபட் வாங்கின வகையில் ரூ. 16611/2, அட்வான்ஸ் ரூ. 4000. மோடி ஆவண மூட்டை எண். 550/C.V. No - 9) ஜோகர்பாய் கல்யாண மண்டபம் என வழைக்கப்பட்டு அதுவே தற்போது புதுக்கட்டிடமாக மாறிவிட்டது. குஜிலி சத்திரக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள ஜயகுபேராபாய் என்ற சொல் 1914 ஆம் ஆண்டுகளில் ஜயகுருபாய் ஆகி ஜோகர்பாய் ஆனதும் ஈண்டு

நினைக்கத்தக்கது. (கண்ணன் அய்யங்கார் வீட்டுமனைப் பத்திரம், லக்ஷ்மண நாயக்கர் அக்ரஹாரம், விண்ணாற்றங்கரை) விண்ணாற்றங்கரைச் சந்தியா மண்டபத்தின் அன்னசத்திரம் தஞ்சை சரசுவதி மகாலைச் சேர்ந்தது. (மோ. ஆ. 36. 1248 (3) மே. 18 ஆம் தேதி ஸேனாதுரந்தர ராமையா வராஹப்பையா தீக்ஷிதானீ ஸர்க்கேலாரா லிகிதே. ஸரஸ்வதீ மஹலாஸ மிலால்யா ஸந்த்யான மண்டப அன்னஸத்ர ப்ராஹ்மண போஜனா சே கர்சாஸ .... (பொருள்) சேனாதுரந்தரர் ராமையா வராஹப்பையா தீக்ஷிதரவர்கள் ஸர்க்கேலுக்கு எழுதியது. சரசுவதி மகாலுக்குச் சேர்ந்த சந்தியாமண்டபத்தின் அன்னசத்திரம் பிராமண போஜனத்தின் (மராட்டிய மன்னர் காலத்தில் சத்திரங்களில் உணவுக்கொடை தாராளமாக நடைபெற்றது. கதி இல்லாதவர், பரதேசி, ஜீவனம் செய்து சம்பாதிக்கச் சக்தியற்றவர், வழிபோக்கர், குருடர், முடவர், அங்கஹீனர், குழந்தை, கிழவர் ஆகியோருக்கும் தேவஸ்தான பணியாளர்களுக்கும் பிராமணர்கட்கும், காசி-ராமேச்வரம் யாத்ரிகர், ஆள் மாகாணம் ஆகியோருக்கும் நாள் ஒன்றுக்கு இரு வேளை உணவு அளிக்கப்பட்டது. பகல் 12 மணிக்கும் மாலை 6 மணிக்கும் மணி அடித்துக் குறிப்பிட்ட நேரத்தில் உணவு அளிக்கப்பட்டது. சத்திரத்திற்கு வரமுடியாதவர்களுக்குத் தெருக்கள்தோறும் சென்று உணவு அளிக்கப்பட்டது. சத்திரத்தில் சாப்பிட முடியாதவர்களுக்குக் காலை 9 மணிக்கு உணவுப் பொருட்கள் வழங்கப்பட்டன. அவ்வாறு தருவதற்கு 'உலுப்பை தருதல்' என்று பெயர். ஆதாரம்: இன்றய உலகிற்கு சரபோஜி கற்றுத்தரும் பாடம், புலவர் இராசு) செலவிற்காக ...... . இங்கு அன்னசத்திரம் கடைத்தெரு, (K. ஆராவமுதன் வீட்டுமனைப் பத்திரம், விண்ணாற்றங்கரை) விட்டோபாஸர்வமான்யம். (Schedule IX, O. S. 3 of 1919, District Court, Thanjavur West) விட்டோபா அக்கிரஹார வீரஆஞ்சனேயர் கோயில் விட்டோபா படித்துறை (மோ. ஆ. சந்த்யான மண்டப துகான்பீதிந்த

விட்டோபா சே படுதோச்யா சமோர வடிகால் கால் வ்யாஸ உத்தர சே கல்யாவரூண ரஸ்தாகால்ணேஸ ரூ. 200. C. V. No. 5, P. No. 3 & 4, (பொருள்) (2) 1841 விண்ணாற்றங்கரை கடைத்தெருவில் விட்டோபாவின் படித்துறைக்கு (இது எங்குளது என்பது ஆராய்ச்சிக்குரியது) எதிரில் வடிகால் கால்வாய்க்கு வடகரையின் மேலிருந்து ரஸ்தா போடுவதற்கு ரூ. 200 (தஞ்சை மராட்டியர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும், தொகுதி : 1, ப. எண். 204) ராணியம்மா படித்துறை, ராயர்படித்துறை, மண்டபம் வீட்டு படித்துறை, சர்க்கார் படித்துறை (1872 & 1874க்குரிய ஸ்டாம்பு பேப்பர், திட்டை சம்பத் அய்யங்கார் வீட்டு மனைபத்திரம், விண்ணாற்றங்கரை) விண்ணாற்றின் வடகரை புஷ்ய மண்டப படித்துறை (தஞ்சை திருக்கோயில்கள், ப. எண். 46) ஆகியன அமைந்துள்ளன.

### 3. 2. சரித்திரம் விளக்கும் சிற்பங்கள்

தஞ்சை மாமணிக்கோயில் என்றழைக்கப்பெறும் விண்ணாற்றாங்கரைத் திருத்தலத்தில் அச்சுதப்பநாயக்கர், சக்கரத்தாழ்வார், வராஹப்பெருமாள் ஆகியோர்களின் சிற்பங்கள் சரித்திரம் விளக்கும் சிற்பங்களாக அறியப் பெறுகின்றன.

### 3. 2. 1. அச்சுதப்ப நாயக்கர்

தஞ்சகன் வேண்டுகோளின் காரணமாய் ஏற்பட்ட தஞ்சை ஆளிநகர் நாயகன் சிங்கப்பெருமாள். அக்கோயிலின் திருப்பணியை அச்சுதப்பநாயக்கர் மேற்கொண்டார் எனத்தெரியவருகிறது. செவ்வப்ப நாயக்கரும் அவர்தம் புதல்வர் அச்சுதப்ப நாயக்கரும் இணைந்து தஞ்சையை ஆண்டு வருகையில் விண்ணாற்றங்கரை சிங்கப் பெருமாள் கோயிலுக்கு புதலூர் என்னும் சிற்றூரைத் திருப்பணிக்காக அளித்துள்ளார். இச்செய்தி ஆழிக்கல் சாஸனத்தால் அறிய முடிகிறது. ஆழி என்றால் சக்கரம் என்பது பொருள். உச்சியில்

சக்கர வடிவத்துடன் நிறைகுடம் போன்ற மங்கலச் சின்னத்துடன் வரலாற்றுச் செய்தியையும் கல்லெழுத்துக் களால் பொறிக்கப்பெற்று நடப்படும் கல்லே ஆழிக்கல் ஆகும். கி. பி. 1566 ஆம் ஆண்டு அச்சுதப்ப நாயக்கர் காலத்தில் அளித்த சிங்கப்பெருமாள் கோயில் நிலக்கொடை சாஸனமுமான ஆழிக்கல்லின் முழுவிபரம் தஞ்சாவூர் நாயக்கர் வரலாற்றில் (தஞ்சாவூர் நாயக்கர் வரலாறு by குடவாயில் பாலசுப்பிரமணியம்) காணக்கிடைக்கின்றது. அவ்வாழிக்கல் தஞ்சாவூர் மேற்குப்பகுதி சக்கரசாமந்தத்தி லிருந்து கிடைத்தமையால் விண்ணாற்றங்கரை விண்ணகரங்கள் பண்டொருகால் தஞ்சையின் மேற்கே விளங்கியமை அறிய முடிகின்றது. அத்துடன் அச்சுதப்ப நாயக்கரின் திருப்பணியும் தெரிய வருகிறது. விண்ணாற்றங்கரை பேருந்து நிறுத்தத் தினையும் "சிங்கப்பெருமாள்கோயில்" என்றழைக்கப் பதற்கு ஒரு சான்று உண்டு. அச்சுதப்பர் அளித்த ஆழிக்கல்லில் காணப்பெறும் "அச்சுதப்ப நாயக்கர் தமக்குப் புண்ணியமாகச் சிங்கப்பெருமாளுக்கு திருப்பணிக்குச் சேரபுதவூர்" என்ற சாஸனவாசகமே அச்சான்றாகும். இத்திருக்கோயிலின் தாயார் சந்நிதி அல்லது தஞ்சைநாயகித்தாயார் சந்நிதியின் முன் மண்டப நுழைவாயிலின் படிகளுக்கு வடப்புறம் (தாயார் சந்நிதி படிகளுக்கு இடப்புறம்) சுவற்றில் அதிஷ்ட்டான வர்கத்தில் ஓர் அடி உயரமுள்ள ஒரு மன்னரின் சிலை காணப்படுகிறது. நின்ற திருக்கோலத்தில் அரசர்க்குரிய இலச்சினைகளுடனும் நாயக்கமன்னர்களுக்கு உரியதான அளகபாரத்துடனும் அல்லது சாயக்கொண்டையுடனும் திகழும் அவ்வுருவத்தினர் ஆழிக்கல் சாஸனப்பிரகாரம் சிங்கப்பெருமாள் கோயிலைத் திருப்பணி செய்துவித்த அரசப்பெருந்தகை "அச்சுதப்ப நாயக்கர்" ஆவார்.

அச்சுதப்ப நாயக்கர் அவர்கள் புதவூரென்னும் சிற்றூரை அளித்ததோடின்றி திருப்பணியும் செய்திருப்பவராதலின் அவரது சிற்றுருவச் சிலைதனை விண்ணாற்றங்கரைச் சிங்கப்பெருமாள் கோயிலில் தஞ்சை நாயகித் தாயார்

சந்நிதியில் நிறுவியுள்ளனர் என்பது தெளிவாகிறது. இச்சிற்றுருவச் சிலை குறித்த ஆய்வினை உறுதி செய்யும் வகையில் சிற்றுருவச் சிலையார் தஞ்சையை ஆண்ட மன்னர் அச்சுதப்பநாயக்கர் தான் என்பதாக தஞ்சாவூர் என்னும் நூல் (by குடவாயில் பாலசுப்பிரமணியம்) கூறுகிறது.

இருப்பினும் விண்ணாற்றங்கரைச் சிங்கப்பெருமாள் கோயிலின் நாச்சியார் சந்நிதி முன் மண்டபச் சுவற்றில் அதிஷ்ட்டான வர்கத்தில் காட்சி நல்கும் அரசரின் உருவம் யாரைக் குறித்தது ? என்பது இன்றளவும் புரியாத புதிராய் இருந்து வந்தது. அவ்வுருவம் இன்றைக்கு அச்சுதப்ப நாயக்கர் என்று உறுதிப்பாட்டுடன் திருநாமமிட்டழைக்க இவ்வாய்வு பெரிதும் துணைநின்றது. (இச்சிற்பச் செய்தியினை தனிக் கட்டுரையாக வெளிக்கொணர்ந்தவர் முனைவர் ஆ. வீரராகவன், விண்ணாற்றங்கரை) இத்தகைய அச்சுதப்பனின் அரிய உருவ ஆராய்ச்சியால் நாயக்க மன்னர்களுக்கும் சிங்கப்பெருமாள் கோயிலுக்கும் உள்ள வரலாற்றுத் தொடர்பினை அறிந்த நாம் தஞ்சை ஆளிநகர்க்கின்றே சென்று அச்சுதப்பநாயக்கரைக் கண்டு மகிழ்வோம்.

**3. 2. 2. சக்கரத்தாழ்வார்**

ஆழி என்னும் சொல் சக்கரத்தையும் ஆழி இறையவன் என்றால் சக்கரத்தாழ்வாரையும் குறிக்கும். சக்கரத்தாழ்வார்

“எண்டள வம்புயத்துள் இலங்கு மறுகோண மிசை
வண்பணிலந் திகிரி வளை வில் வளைவாய் முசலம்
திண்கையிலங்குசம் சீர் திகழும் கதை செங்கமலம்
எண்படையேந்தி நின்றான் எழிலாழி இறையவனே”

(ஸ்ரீதேசிகப்பிரபந்தம்) என்கிறபடி ஒரு பக்கம் எட்டுத் தளமுள்ள தாமரையில் அறுகோணத்தில் படைக்கலன் களுடன் ஆழி இறையவனான ஸ்ரீசுதர்சனப்பெருமாள் அருள்புரிவதும் மற்றொரு பக்கம் நரங்கலந்த சிங்கம் உயோக நிலையில் அமர்ந்து அருள்பாலிப்பதும் இயற்கை.

தஞ்சையாளி வீரநரசிங்கப் பெருமாள் கோயிலில் அரவணையில் கண்துயிலும் அரங்கநகர் அப்பனுக்கும் ஸ்ரீவரதராஜப்பெருமாளுக்கும் இடைப்பட்ட பகுதியில் கிழக்கு மேற்கு முகமாக ஆழி ஒன்று உள்ளது. இவ்வாழி யினை எங்கும் காண்பதரிது. சிங்கப்பெருமாள் கோயிலில் வீரநரசிங்கன் கிழக்குத் திசை நோக்கி அருள்பாலித்து வருவதால் ஆழிஇறையவனாம் சக்கரத்தாழ்வாரிலும் ஆளரியை நாம் கிழக்குமுகமாகக் காணலாம். மேற்கு முகம் சென்று பார்த்தால் ஆழிப்பிரான் இருக்க வேண்டிய இடத்தில் ஆனைக்கருள்பவன் அருள்பாலிக்கின்றான். எம்பெருமான் வானிலிருந்து கீழே இறங்கி வந்ததைக் காண்பிக்கும் முகமாக அவனது திருவடிகமலங்கள் யானை மற்றும் அரசர்களது இடுப்புப் பகுதியின் சமநேர்க்கோட்டில் வருமாறு அமைக்கப் பெற்றுள்ளன. எம்பெருமானின் மேலிரு கைகளில் முறையே ஆழியும் சங்கும் காணப்படுகின்றன. நாரணனின் கீழ் இடக்கை இடுப்பிலும், கீழ்வலக்கை யானையின் மத்தகத்திலும் வைக்கப்பட்டுள்ளன. வலப்புறம் அமைந்த யானையின் துதிக்கை தூக்கியதின்றி தழையப்பரமனடி பணிந்த நிலையில் காணப்படுகின்றது. யானையின் முகத்தில் வாயெடுத்தலறி கூவும் நிலைதனை தோன்றச்செய்தும், நாரணன் கைத்தலம்பட்டு மேல்நீட்டும் ஆனையின் கைதனை தழையப்பெற்றதாய் ஒருங்கே அமைத்துக் காட்டியுள்ளதைப் பார்க்கும்போது சிற்பியின் கைவண்ணத்தைப் புகழாமல் இருக்க முடியாது. அவரது இடப்புறம் குறுவாளுடன் கூப்பிய கரத்தோடு கிரீடம் தரித்தவராய் ஓர் அரசர் ஈசனை ஏத்துகின்றார்.

### கஜேந்திர மோக்ஷம்

விண்ணாற்றங்கரைச் சக்கரத்தாழ்வார் சிற்பம் இத்தலத்தை மோக்ஷஸ்தலம் என்று முடிவு செய்யும் பாங்கில் ஸ்ரீ பாகவதக் கதையையும் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது. ஸ்ரீபாகவதம் கூறும் கஜேந்திர மோக்ஷத்தைச் சிறிது பார்ப்போம்.

மீனமர்பொய்கைநாண்மலர்கொய்வான்
வேட்கையினோடு சென்றிழிந்த
கானமர்வேழம் கையெடுத்தலர
கராவதன் காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப் புள்ளூர்ந்து
சென்று நின்றாழி தொட்டானை
தேனமர் சோலை மாடமாமயிலை
திருவல்லிக்கேணி கண்டேனே.
(பெரியதிருமொழி-2-3-9)

என்கிறபடி ஒரு சமயம் தேவலன் என்பவன் நீராடப் பொய்கை வந்தான். அப்போது அவனது காலைப்பற்றியீர்த்த ஹூஹூ என்னும் கந்தர்வன், தேவலனின் சாபத்திற்கு ஆளாகி முதலையானான். இந்த்ரத்யும்னன் என்னும் அரசன் மலய மலையில் திருமாலைக் குறித்துத் தவம் செய்ய அப்போது வந்த ஒரு முனிவரைக் கவனியாது யானை போல் மதங்கொண்டிருந்தான். அதைக் கண்டு சினங்கொண்ட முனிவர் 'நீ யானையாகக் கடவாய்' எனச் சாபமிட்டு விடுகிறார். முன் செய்த நல்வினையால் யானை உருவிலும் இந்த்ரத்யும்னன் போதோடு புனல் தூவித் திருமாலை பூசித்து வந்தான். வழக்கம் போல் மலர்க்கொய்யும் போது அவன் முதலையால் கவ்வப் பெற்றான். யானையும் தன் "நீரார் மலர்க்கமலம் கொண்டோர் நெடுங்கையால் நாராயணா! ஓ! மணிவண்ணா! நாகணையாய், வாராய்! என் ஆரிடரை நீக்காய்" (சிறியதிருமடல்) என்று அலறியது. அரவப்பகையூர்தியில் அமலனும் வந்து இறங்கினான். வந்திறங்கிய பின் முதல்வேலையாக முதலையால் கதுவப்பெற்ற யானையையும் சேர்த்து அவ்விரண்டையும் கரையில் தூக்கிப்போட்டுத் தன் சக்கரத்தால் முதலையைத் துணிக்க ஹூஹூ எனும் கந்தர்வன் சாபத்திலிருந்து விடுதலை பெற்றான். அதன்பின் தன் வலது கரத்தால் திருமால் யானையைத் தடவிக்கொடுக்க, சாபத்தால் யானை வடிவேற்ற இந்த்ரத்யும்னன், வீடுபேற்றை யடைந்தான் என்பது பாகவதம் எட்டாம் அத்யாயம் (ஸ்ரீமத்

பாகவதரஸாம்ருதம், ப. எண். 157 & 158) சொல்லும் கதை. கஜேந்திர மோக்ஷத்தில் முதலையைச் சக்ராயுதத்தால் மாய்ப்பது முதல் நிலை. ஆனையின் மத்தகத்தில் கையால் தடவிக் கொடுக்கும் காட்சி இரண்டாம் நிலை. சாபவடிவான யானை வடிவிலிருந்து விடுதலை பெற்று இந்த்ரத்யும்னன் சுயஉருவில் திருமாலை வணங்குதல் மூன்றாம் நிலை. இந்த மூன்றாவதான நிலையைக் காணவேண்டுமாகில் விண்ணாற்றங்கரை ஸ்ரீவீரநரசிங்கப் பெருமாள் கோயிலுக்கு நீங்கள் வந்தே ஆகவேண்டும். ஏனென்றால் இது ஒரு அரிய வகை ஆழிப்பிரான் சிற்பம். விண்ணாற்றங்கரை சக்கரத்தாழ்வார் சிற்பம் கீழ்த் திசையில் ஆழியுள் அமர்ந்த நரசிங்கமாகப் பொன்பெயரோன் மார்பிடந்தவனைக் குறிப்பிட்டாலும் பொன் பெயரோனும் எம்பெருமானை அருகே நின்றேத்துங்காட்சி சிறப்புடைய ஒன்று. மேற்றிசையில் சாபமோக்ஷம் பெற்ற இந்த்ரத்யும்னன் நாரணனைத் தொழுவதும் குறிப்பிடத்தக்கது. ஆகவே இச்சிற்பம் தஞ்சையாளிநகர்த்தலபுராணத்தையும் இத்தலம் மோக்ஷஸ்தலம் என்பதையும் பறைசாற்றுகின்றது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

### 3. 2. 3. வராஹப் பெருமாள்

தஞ்சகனுக்கு ஏற்பட்ட நிலையைக் கருத்தில் கொண்ட தண்டகன் அச்சத்தோடு கைகளால் பூமியைப் பிளந்து சென்று மறைய நீலமேகன் கமண்டலம் ஒன்றை கைக்கொண்டவராய் வராஹ உருவெடுத்து பூமியினுட் புகுந்தோடிய தண்டகனை மாய்த்தார். தண்டகனை மாய்க்க வந்த எம்பெருமான் அவனது வேண்டுகோளால்

> “ப்ரதிச்ருத வரஸ்தஸ்மை வதகாலே ஸுரத்விஷ: ।
> ஸ்ரீமத் வராஹரூபேண தத்ராஸ்தே தத்வதஸ்த்தலே” ॥

(தஞ்சைத் திருக்கோயில்கள், ப. 29 & 30) என்கிற வகையில் வராஹப்பெருமாளாக நின்ற திருக்கோலத்தில் காட்சி நல்குவதால் இந்த நீலமேகப்பெருமாள் சந்நிதி வராஹ க்ஷேத்திரம் எனவழைக்கப்படுவதில் மிகையில்லை.

ஸ்ரீநீலமேகப்பெருமாள் பூதபிசாசங்களுக்கு நாயகனாகவும் அவரது அஷ்டோத்தரசதநாம ஸ்தோத்திரத்தில் 'தண்டபாணயே' என்றும் போற்றப்படுகின்றார். ஆகவே தான் அவற்றை யெல்லாம் விரட்டியடிக்கும் சக்திபெற்ற தண்டினைத் தஞ்சை மாமணிக்கோயில் ஸ்ரீ நீலமேகப்பெருமாள் கையினில் கொண்டு செங்கோல் (கோல் கொண்ட) கையனாகக் காட்சி தருகின்றார். இவ்வெம்பெருமானை வணங்கினால் மனநோய்களும் மனோவ்யாகுலங்களும் மாயமாய் மறைந்துவிடும்.

### 4. தஞ்சை மாமணிக்கோயில் சிற்பங்களும் அவற்றின் சிறப்புகளும்

தஞ்சை மாமணிக் கோயில் என்றழைக்கப்பெறும் விண்ணாற்றங்கரைத் தலத்தில் அமைந்துள்ள நரசிம்மர்கள், கனியுண்ணும் ராமபிரான், ஸ்ரீசடகோபர், ஸ்ரீபாஷ்யகாரர் ஆகியோரின் சிற்பங்களையும் அதன் சிறப்பம்சங்களையும் இனி நாம் பார்ப்போம்.

### 4. 1. பாராசரக்ஷேத்திர நரசிம்மர்கள்

தஞ்சை யாளிநகர்ச்சிங்கப்பெருமாள் கோயிலில் கருவரை வீரநரசிங்கன். ஆழியுள் அமர்ந்த நரசிங்கன், கொடிமரத்து நரசிங்கன், கல்யாண நரசிங்கன், விதானத்து வீரநரசிம்மன் ஆகிய ஐவரையும் தஞ்சை மாமணிக்கோயில் நீலமேகப்பெருமாள் சந்நிதியில் கருடாழ்வார் விமானத்தே தெற்கு முகமாகக் காட்சி தரும் அபயவரத நரசிங்கன். செங்கமலவல்லித்தாயார் சந்நிதி முன் மண்டபத்தூணில் கம்பத்தடி உயோகநரசிங்கன், நீலமேகப்பெருமாளுக்கு வடகிழக்கில் முன் மண்டப வடமேற்கு மூலையில் கிழக்கு நோக்கியவாறு லக்ஷ்மியை வலது பக்கத்தில் அமர்த்தப்பெற்ற வலவெந்தை லக்ஷ்மீ நரசிங்கன் ஆகிய மூவரையும் சேர்த்து எட்டுவகை நரஸிம்மர்களை பராசரக்ஷேத்திரத்தில் நாம் கண்டு வணங்கலாம்.

### 4. 1. 1. கருவரை வீரநரசிங்கன்

தஞ்சையாளிநகர்ச்சிங்கப்பெருமாள்கோயில் மூல ஸ்தானத்தில் எழுந்தருளியிருப்பவர் வீரம் என்ற குணத்தின் வடிவாய் இலங்குபவர். தஞ்சகாசுரன் இறுதியில் எம்பெருமானிடம் கேட்டுக்கொண்டதன் பேரில் தஞ்சையாளி வீரநரசிங்கமாகவே இன்றளவும் அருள்பாலித்து வருகிறார். எம்பெருமான் திருமகளும் மண்மகளும் சேர்ந்து பரமபதத்தில் அருள்பாலித்து வரும் ஸ்ரீவைகுந்தநாதனே தஞ்சகனுக்கு மோக்ஷ நிலையில் நரங்கலந்த சிங்கமாகக் காட்சி கொடுத்தார். ஆதலால் இத்திருத்தலத்திற்கு மோக்ஷஸ்தலம் என்ற சிறப்புப் பெயரும் உண்டு.

### 4. 1. 2. ஆழியுள் அமர்ந்த நரசிங்கன்

விண்ணாற்றங்கரையிலுள்ள விஷ்ணு ஆலயங்கள் அனைத்துமே கிழக்கு நோக்கியுள்ளன. இத்தலத்தின் சிங்கப் பெருமாள் கோயிலில் உள்ள ஆழி எனப்படும் சக்கரத்தினுள் கீழ்த்திசையில் தென்வடபார்சுவங்களில் முறையே பிரஹல்லாதன் ஹிரண்யகசிபு ஆகிய இருவரையும் நின்ற நிலையில் நிறுவி நடுவே யோக நரசிங்கனை அமர்ந்த கோலத்தில் எழுந்தருளச் செய்துள்ளனர். சிங்கப்பெருமாள் கோயில் நரசிங்கனைத் தஞ்சையாளியைப் பொன்பெயரோன் நெஞ்சமன்றிடந்தவன் எனத் திருமங்கை ஆழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ளதை நினைவிற் கொண்டே தான் பிரஹ்லாதன் ஹிரண்யகசிபு ஆகிய இருவர் புடைசூழ ஆழியுள் அமர்ந்த நரசிங்கனை அமைத்திருக்கலா மெனத் தோன்றுகிறது.

### 4. 1. 3. கொடிமரத்து நரசிங்கன்

கருவரை வீரநரசிங்கன், இனிக்கூறவுள்ள கல்யாண நரசிங்கன், விதானத்து வீரநரசிங்கன் ஆகியோர் அனைவரும் இடதுகாலை தொங்கவிட்டபடி காட்சி தருகின்றனர். இருப்பினும் வீரநரசிங்கன் கோயிலான சிங்கப்பெருமாள் கோயிலின் கொடி மரத்தில் உபயநாச்சிமார்கள்

இருமருங்கிலும் அமர்ந்தவராய் நரசிம்மன் தன்னுடைய வலதுகாலை தொங்கவிட்டபடி காட்சி தருவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

### 4. 1. 4. கல்யாண நரசிங்கன்

தஞ்சை யாளி நகர்ச்சிங்கப்பெருமாள் கோயிலினுள்ளே சென்று திருச்சுற்றில் வேதசுந்தர விமானத்தின் (மூலவர் விமானத்தின்) இடுப்புப் பகுதியான தென்மேற்கு மூலையில் (உச்சிஷ்ட்ட கணபதிக்கு மேற்கே) கல்யாண நரசிங்கனைக் காணலாம். மணக்கோலத்தில் காணப்படும் இவரை மணவாழ்வு தரும் மணக்கோல நரசிங்கன் எனும் தலைப்பின் கீழ் சிறிது காண்போம்.

### மணவாழ்வு தரும் மணக்கோல நரசிம்மன்

லக்ஷ்மிநரசிம்மன் என்று சொன்னால் லக்ஷ்மியைத் தன் இடது பக்கம் அமர்த்திய கோலம் தான் நம்முடைய நினைவிற்கு வரும். வலவெந்தை நரசிங்கர்களாக வலப்புறம் லக்ஷ்மியைத் தன்தொடைமீது அமர்த்தி அருளாசி வழங்குவோரின் தலங்கள் குறித்து மாமழையைத் தரும் மாமணிசிம்மன் என்னும் தலைப்பில் விரிவாய் நாம் அறியலாம். அந்த திருத்தலங்களைக் காட்டிலும் தஞ்சையாளி நகர்ச் (தஞ்சை-விண்ணாற்றங்கரைச்) சிங்கப்பெருமாள் கோயில் காணப்பெறும் மணக்கோல (கல்யாண) நரசிங்கன் தனிச் சிறப்பு வாய்ந்தவர். ஏனெனில், அங்கெல்லாம் நரசிங்கனின் வலத்தொடை மீதமர்ந்த லக்ஷ்மி கூப்பிய கரங்களுடன் காட்சி தருகின்றார். இங்கோ சற்று வித்யாஸம் தென்படுகிறது. மங்கையோடு மணக்கோலம் (கல்யாண) நரசிங்கன் மனமகிழும் மாநரசிங்கனாக இவர் இருப்பதால் இவ்வெம்பெருமானை மணக்கோல (கல்யாண) நரசிங்கன் என்றழைப்பது பொருத்தமானதே. விண்ணாற்றங்கரை நரசிங்கப்பெருமாள் கோயிலின் மணக்கோல நரசிங்கன் தென்திசை நோக்கிய திருமுகமண்டலத்துடன் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். அவரது வலத்தொடை மீதமர்ந்த

திருக்கோலத்தில் விளங்குகிறாள் அன்னை மகாலக்ஷ்மி. மகாலக்ஷ்மியின் இடது கரம் மேலே நிமிர்த்திய நிலையில் தாமரை மலரைத் தாங்கியும் வலதுகரம் கீழே தொங்கவிடப் பட்டுள்ள நிலையிலும் அமைக்கப்பெற்றுள்ளது. மகாலக்ஷ்மியின் இருகால்களும் தொங்கவிடப்பட்டுள்ளன. நரசிங்கனும் வலது காலை மடக்கி இடதுகாலை தொங்க விட்டபடி அமர்ந்து வீராஸனத்தில் காட்சி நல்குவதோடு மேலிருகரத்தில் சங்குசக்ரங்களைப் பெற்றும், இடது கீழ்க் கையினைத் தன்தொடை மீது நிறுத்தியும், வலது கீழ்க் கையால் தன்நாயகியின் தோள் மீது கையை வைத்து திருமகளை அணைத்தவாறும் விளங்குகின்றார். இத்திருவுருவம் காண்பதற்கரிதான ஒன்று. சிங்கப்பெருமாள் கோயிலின் உட்பிரகாரத் தென் பகுதியில் கோயில் கொண்டுள்ள மணக்கோல நரசிங்கனை மனமார்ந்த மணவாழ்க்கை அமைவதற்கு வெள்ளிக்கிழமைகளிலும் வாழ்வில் மனநிம்மதியினைப் பெற விண்ணாற்றங்கரை வீர நரசிங்கனை சனிக்கிழமைகளிலும் வழிபடுவது சாலச்சிறந்தது.

### 4. 1. 5. விதானத்து வீரநரசிங்கன்

தஞ்சையாளிநகர்ச்சிங்கப்பெருமாள் கோயிலில் கருவரைக்கு வெளிப்புரம் வடக்கு சுவற்றில் கோமுகத்திற்கு மேலும் ஆண்டாள் சந்நிதி வாயிலுக்குத் தெற்கிலும் வடதிசையை நோக்கிய வண்ணம் காட்சி தருபவரே விதானத்து வீரநரசிங்கன் 'மஹாதோ மஹீயான்' என்ற வேதவாக்கியத்திற்கு பெருமை சேர்த்திடும் வகையில் கருவரையில் பெரிய உருவாகக் காட்சி நல்கிய அந்த வீரநரசிங்கன் யாதவாத்ரி எனப்படும் மேல்கோட்டை திருநாராயணபுரத்தின் தாயார் சந்நிதி முகமண்டபத்தில் காணக்கிடைக்கும் மிளகாழ்வார் போலே 'அணோரணீயான்' எனப்படும் சுருதிச் சொல்லை ஸார்த்தகமாக்கிடும் வண்ணம் சிறிய வீரநரசிங்கன் உபயநாச்சியார்கள் இன்றித் தனித்தவாறே அமர்ந்த நிலையில் கருவரை வீரநரசிங்கன் போலவே சேவை சாதிக்கின்றார்.

### 4. 1. 6. அபயவரத நரசிங்கன்

இந்த நரசிங்கனைத் தரிசிக்க விண்ணாற்றங்கரை ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயிலுக்குச் செல்ல வேண்டும். இத்திருக்கோயிலின் கருடன் சந்நிதி விமானத்தில் தெற்கு முகமாக சங்கு சக்கரம் அபயம் வரதம் போன்ற அமைப்புகளுடன் ஸ்ரீ ந்ருஸிம்ஹன் அமர்ந்த கோலத்தில் அருளாசி புரிகிறார். அழகியதாம் உருவாக அரும்பெரும் சுதாமூர்த்தியாகத் திகழ்பவர் இந்த அபயவரத நரசிம்மர்.

### 4. 1. 7. கம்பத்தடி யோகநரசிங்கன்

ஸ்ரீ செங்கமலவல்லி நாயிகா உடனுரை நீலமேகப் பெருமாள் கோயிலின் தாயார் சந்நிதியில் முகமண்டபத் தூணில் தென்திசை நோக்கியவாறு கம்பத்தடி யோகநரசிங்கன் அருள்பாலிக்கிறார். அவரது உருவம் காண்போரின் கண்களை கொள்ளை கொள்கின்றது. அவ்வகையில் அழகிய சிற்ப அமைதியுடன் அழகோடு அமைந்த உயோக நரசிம்மரைத் தஞ்சை பிருஹதீச்வரர் ஆலயத்திலு ம் காணமுடிகின்றது. கம்பத்தடி யோகநரசிங்கன் தென்திசை நோக்க கீழைத் திசையில் வீரஆஞ்சநேயர் காட்சி கொடுக்கின்றார். இம்மூர்த்திகளை 108 முறை வலம் வந்தால் எண்ணியவை இனிது நிறைவேறும் என்பது தொன்றுதொட்டுக் கூறப்பெறும் சிறப்புச்செய்தி (ஆதாரம்: தஞ்சை விண்ணகரில் நன்னகரான், கட்டுரை - சத்யமூர்த்தி அய்யங்கார், கல்யாணபுரம்) ஆகும். மேலும் தென்திசை நோக்கி நரசிம்மர் அருள்பாலிப்பதே மிகச் சிறப்பான ஒன்று. அதற்கு அணி சேர்க்கும் வண்ணம் தெற்கே திருமுக மண்டலத்துடன் அமைந்த 1. தஞ்சையாளிநகர்ச் சிங்கப்பெருமாள் கோயிலில் அமர்ந்த கோலத்தில் மணக்கோல லக்ஷ்மீ நரசிங்கன், 2. ஸ்ரீ நீலமேகப்பெருமாள் சந்நிதியில் கருடன் சந்நிதி விமானத்தில் அமர்ந்த அபய வரத நரசிங்கன், 3. நீலமேகப்பெருமாள் கோயிலில் செங்கமலவல்லித் தாயார் சந்நிதி முகமண்டபத் தூணில் கம்பத்தடியான் ஆகக் காட்சி கொடுக்கின்ற உயோக நரசிங்கன், 4. தஞ்சையின்

கீழ்பகுதியான கொண்டிராஜப் பாளையம் என்னும் கீழவாசலில் அருள்பாலிக்கும் யோக நரசிங்கன், 5. தஞ்சை வல்லத்தில் அருள்பாலிக்கும் ஸ்ரீ மாதவயோக நரசிங்கன் ஆகியோர் அமைந்து விளங்கு கின்றனர்.

### 4. 1. 8. வலவெந்தை லக்ஷ்மீநரசிங்கன்

ஸ்ரீ தஞ்சை மாமணிக் கோயில் நீலமேகப்பெருமாள் சந்நிதிக்கு வடகிழக்குப் பகுதியின் முகமண்டப வடமேற்கு மூலையில் அஞ்சலி முத்திரையுடன்கூடிய லக்ஷ்மியைத் தன் வலத்தொடையில் அமர்த்தியுள்ள அற்புத நரசிங்கனை நம்மால் காணமுடிகிறது. அவரது மேலிருகரங்கள் திருவாழித்திருச்சங்கங்களை முறையே பெற்றும் கீழிரு கரங்களில் வலது கை பிராட்டியை (இடுப்பப் பகுதியில்) அணைத்தவாறும் இடது கீழ்க்கையினைத் தன்தொடை மீது இருத்தியும் அமைக்கப்பெற்றுள்ளன. ஸ்ரீந்ருஸிம்மமூர்த்தி வலது பார்சுவத்தில் 'பிரபோ ! கோபமுபஸம்ஹரேதி ...... தக்ஷிணே ப்ராஞ்சலி க்ருதாம் ச்ரியம் தேவீம் வந்தமானம் த்விஹஸ்தம் .... என்கிறபடி நரஸிம்மஸ்வாமியின் சினத்தைத் தணித்துக்கொள்ள அவரிடம் பணிந்து வேண்டுபவளாய் இரு கைகளுடன் அஞ்சலி முத்திரையோடு, லக்ஷ்மியை நிறுவுதல் ஸ்ரீவைகானஸம் - காச்யப ஞான காண்டம் (ந்ருஸிம்மாவதார கட்டம் P. No. 156&157) கூறுகிறது. இக்கருத்தின் அடிப்படையில் 'சிங்கப்பிரான் இரணியனை மார்புகீண்டு அழித்தபின்பும் கோபம் தணியாமல் உக்கிரம் மேலிட்டிருக்க அந்தப் பெருங்கோபத்தைக் கண்டு....... பிரகலாதன் பணிந்து பிரார்த்தித்ததனாலும், தேவர்கள் துதித்ததனாலும், இலக்குமி சமீபித்ததனாலும் சினந்தணிந்தனன்' என்பதும் 1966 ஆம் ஆண்டு சென்னையிலிருந்து வை. மு. கோ. அவர்களின் உரையோடு வெளிவந்த 'அஷ்டப்பிரபந்தம்' தொகுதி இரண்டின் 'திருவரங்கத்துமாலை' முப்பத்திரண்டாம் பாசுர குறிப்புரையும் எழுந்துள்ளது. இம்மூர்த்தியின் தியான

சுலோகம் இதையடுத்துவரும் மாமழையைத் தரும் மாமணி சிம்மன் என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

திருநாங்கூர் க்ஷேத்திரத்திற்கு அருகிலுள்ள திருவாலியில் வலவெந்தை ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்மரையும், குறையலூரில் ஸ்ரீ உக்கிர நரசிம்மரையும் திருநகரியில் ஸ்ரீ ஹிரண்யநரசிம்மரையும், புதுத்துறையில் ஸ்ரீஉயோக நரசிம்மரையும், மங்கைமடத்தில் ஸ்ரீவீரநரசிம்மரையும் காணலாம். அங்கே செல்ல இயலாதவர்களுக்கு ஒரு புகலிடமாய்ச் சரண்ய நகரம் ஆகத் திகழ்வது தஞ்சையின் தஞ்சை விண்ணாற்றங்கரைப் பராசர க்ஷேத்திரமாகும். ஸ்ரீ வீரநரசிங்கனையும் ஸ்ரீ நீலமேகனையும் சுற்றி நாம் வலம் செய்ய நம் துயர்கெடுவதோடு எட்டுவகை நரசிம்மர்களையும் சேவித்த புண்ணியத்தையும் பெறலாம்.

**மாமழையைத் தரும் மாமணி சிம்மன்**

மழையை விரும்புபவன் ஜபஹோமாதிகளை மேற்கொள்ள சுத்தமான இடத்தைத் தேர்ந்தெடுத்து அந்த இடத்தினை கோமயத்தால் சுத்தம் செய்திடல் வேண்டும். பின் காவிரியிலிருந்து கொணர்ந்த தீர்த்தத்தைக் கலசத்தில் வேதவொலியும் விழாவொலியுமாகக் கொண்டுவருதல் வேண்டும். பிறகு ரக்த (சிவப்பு) திரவ்யத்தால் மண்டலம் அமைக்க வேண்டும். அந்த மண்டலத்தின் எதிரில் இந்திரன் முதலான எண் திசைக் காப்பாளர்களுக்கும் பிரதான மூர்த்திக்குமாக ஒன்பது கும்பங்களை (பிரதான கும்பத்தைச் சுற்றி எண்திசைக் காப்பாளர்களுக்கு ஒரு கும்பம் வீதம்) ஸ்தாபித்து அதன் (பிரதான கும்பத்தின்) நடுவில் எண்டளமுள்ள பொன் தாமரையில் சூர்யதேவனையும், மூன்று கண்கள், நாற்கரங்கள், பொற்றாமரைக்கரம், முத்துமாலை கிரீடம், ஹாரம் (கழுத்தணி), கேயூரம் (தோள்வளை), கடகம் (கைவளை), கடிசூத்ரம் (ஒட்டியாணம்), கர்ண குண்டலங்கள் போன்ற அணிகலன்

களுடன் பீதாம்பரம் உடுத்தி பிரஸன்னவ தனமாய்த் திகழ்பவரும், திருமறுமார்பனாகவும், தாமரைக்கைய னாகவும், தாமரையில் எழுந்தருளி இருப்பவ னாகவும், திருமகளோடு இனிதமர்ந்த செல்வனாகவும், அரவிந்தம் போன்ற கண்ணனாகவும், செங்கண்மாலாகவும், பத்மநாப னாகவும், பக்தர்களின் துயர்துடைப்பவராகவும், தன்னுடைய வலது தொடைப் பகுதியில் லக்ஷ்மியை அமர்த்தியவராகவும் காட்சி நல்கும் (விஷ்ணுவை) லக்ஷ்மிநரஸிம்மரை தியானித்து வணங்குதல் வேண்டும். மழை தரும் லக்ஷ்மிநரஸிம்மர் தியானம் கீழ்வருமாறு- சதுர்பாஹும் த்ரிணேத்ரம் ச பத்மஹஸ்தம் ஹிரண்மயம் । ஸர்வாபரணஸஞ்சன்னம் முக்தாஹார விபூஷிதம் ॥ கிரீட ஹார கேயூர கடகாதி விபூஷிதம் ॥ பீதாம்பரதரம் ஸௌம்யம் பிரஸன்னவதநம் சுபம் ॥ கடி சூத்ர ஸமாயுக்தம் குண்டலாப்யாம் விராஜிதம் ॥ ஸ்ரீவத்ஸவக்ஷஸம் ஸ்ரீசம் ஸ்ரீகரம் ஸ்ரீநிகேதனம் ॥ ச்ரியா ஜுஷ்டம் ஸதா ஸம்யக் தாம்ரபத்மநிபேக்ஷணம் ॥ பத்மநாபமுதாராங்கம் பக்தார்த்தி சமனம் ஹரிம் ॥ தஸ்யாங்க்கே தக்ஷிணே லக்ஷ்மீம் ஸமாஸீனாம் விசிந்தயேத் ॥ மந்த்ரமுர்த்யாத்மகோ தேவ : (தேவ்யா) மந்தரவாச்யஸ்து ஸ பிரபு: ॥ *(அத்-48, சு: 19-23)* என லக்ஷ்மிநரஸிம்மனின் தியான முறையினை ஸ்ரீ பாஞ்சராத்திராகமத்தின் நூற்றெட்டு ஸம்ஹிதைகளுள் ஒன்றான அஹிர்புத்ன்ய ஸம்ஹிதை நமக்கு தெரிவிக்கிறது. வேள்வியாக 108 முறை விஷ்ணு (ஸிம்ம) மந்திரத்தினை பாயஸத்தினாலும், (பாயஸநிர்மாணபத்ததி 'தண்டுலஸ்யார் தேன முத்கஸாரேண த்ரிகுணேன பயஸா பக்வஸ்ய பாயஸஸ்ய குடம் க்ருதம் ச பாதம் பாதம்' இதி காச்யப ஜ்ஞான காண்டம், ப. எண். 140) நெய்யாலும் அக்னியில் ஆஹுதி செய்ய வேண்டும். (பாரமாத்மிக மந்த்ரேஷு 'யோ வா ந்ருஸிம்ம' இத்யஷ்டாதிக சதமாவர்த்ய (சதமாஜ்யேன) ஜுஹுயாத் .... ஹவிர்நிவேதனே பலிதானே ச பாயஸம் ச்ரேஷ்டம் இதி விசேஷ: - பாரமார்த்திகோபநிஷத்தில் கூறப்பட்டுள்ள 'யோ வா ந்ருஸிம்ம' எனத்தொடங்கும் மந்திரத்தை 100 முறை ஆவர்த்தி

செய்து, நெய்யினால் ஆகுதி கொடுக்கவும், ஹவிர் நிவேதன பலிதானங்களில் பாயஸம் சிறந்தது என்றும் ஸ்ரீவைகானஸம் - காச்யப ஜ்ஞான காண்டம் P. No. 156,157ல் தெரிவிக்கப்பட்டுள்ளது) ஆயிரக்கணக்கான முறை ஸிம்ம மூர்த்தியை தியானித்து வணங்குதல் வேண்டும். இவ்வாறு செய்கையை ஏழு அல்லது பன்னிரண்டு நாட்கள் மேற்கொண்டால் மந்த்ரமூர்த்தியான எம்பெருமான் மகிழ்வடைந்து மகாவிருஷ்டியை நமக்கு அளித்தருள்வார். வைதஸ்ஸால் (பிரம்புச் சமித்தால்) செய்யப்படும் வேள்வியும் மழை தந்து நம்மை மகிழ்வூட்டும். ஸ்ரீ வைகானஸாகம மரீசி ஸம்ஹிதையில் அதி விருஷ்டி அநாவிருஷ்டி சாந்தி பிரயோகத்தில் வைதஸ்ஸால் (பிரம்புச்சமித்தால்) செய்யப்படும் வேள்விக்குறிப்பு ஈண்டு நினைக்கத்தக்கது. மழைக்காகவே மேற்கொள்ளப்படும் இவ்வேள்வியினை செய்பவன் உண்ணா நோன்புடன் ஈர வாடையுடுத்தியவனாய் இருத்தல் வேண்டும். எம்பெருமானுடைய திவ்ய சாஸனத்தால் ஏழு நாட்களில் பெருமழை உண்டாகும். மழை நிற்க சாந்தியாக பஸ்ம லவண ஹோமங்களைச் செய்யலாம்.

(ஸம்யுக்தை: பயஸாபத்ரை: புஷ்பைர் வா வேதஸஸ்ய ச ।
பாயஸேன சதம் ஹுத்வா ஸப்தாஹம் வ்ருஷ்டிமாப்னுயாத் ॥

நீர்வஞ்சிச் சமித்து, இலை, பூ ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றை பால் அல்லது பாயஸத்துடன் சேர்த்து 100 முறை 7 நாட்கள் ஆகுதி கொடுக்க பெருமழை உண்டாகும். பலத்தை மழையினைத் தடுக்க "ஜலே பஸ்ம சதம் ஹுத்வா மஹாவ்ருஷ்டிம் நிவாரயேத்" ஜலத்தில் 100 முறை பஸ்மாஹுதி கொடுக்கவேண்டும். இச்செய்தி தேவிபாகவதம் அத்யாயம் -24ல் 57 மற்றும் 61ம் சுலோகங்களில் காணக்கிடைக்கின்றது.) இதனை காலையில் நீராடி தினமும் ஆயிரக்கணக்கில் ஜபம் செய்கின்ற வர்களுக்கும் பகற்பொழுது முழுதுமாய் பால் மட்டும் அருந்தி புலனடக்கத்துடன் ஜபிப்பவர்களுக்கும் ஐச்வர்யம், ஆரோக்யம் தேஜஸ் (ஒளி) எப்போதும் வளர்ச்சியுறும்.

சக்திக்கேற்ப ஜபிப்பவர்களுக்கும் அணிமாதி எண்சித்திகளும் கிடைக்கும். ஆயிரத்தெட்டு முறை தினம் ஜபிப்பவர்களின் பாபம் அனைத்தும் நீங்கும். கங்குலும் பகலுமாய் கண்விழித்து இதனை மேற்கொள்ளுபவர் பஞ்சகவ்ய பிராசனம் செய்யவேண்டும். பஞ்சகவ்ய பிராசனத்தோடு ஐந்து தினங்கள் மேற்கொள்ளும் இம்மந்திர ஜபம் பிரஹ்மஹத்தி முதலான ஸர்வபாதக தோஷங்களிலிருந்தும் விடுதலை பெற்றுத்தரும். இதனை ஆயிரத்தெட்டு முறை ஜபித்து பிறகு விதை விதைத்தால் பெருமளவில் தான்யச் செல்வத்தை அளிக்கும். இவ்வெம்பெருமானை பாலாலும் நெய்யாலும் நீராட்டுவிப்பவன் நினைத்தவையனைத்தும் கிட்டப் பெறுவான். மழை தரும் ஜபவேள்வியாகிய இதனை உண்ணா நோன்பிருந்து மேற்கொள்ளக் கூறியிருப்பதால் மந்த்ராபிமந்த்ரிதமான அன்னத்தை புசிப்பதில் தவறில்லை. எப்போதும் இம்மந்திரஜபம் உட்கார்ந்தே செய்தல் வேண்டும். ஸ்ரீ பாஞ்சராத்திர ஆகமத்தைச் சார்ந்த அஹிர்புத்ன்ய ஸம்ஹிதை கூறும் இத்தகைய லக்ஷ்மி நரஸிம்மர்களை விண்ணாற்றங்கரைதனிலும், திருவாலி, சிங்கரிகோயில், காவலகுடி, படவேடு, ஆலங்குடி ஸ்ரீஅபயவரதராஜப்பெருமாள்கோயில் ஆகிய க்ஷேத்திரங் களிலும் கண்டு வணங்கலாம்.

### 4. 2. கனி உண்ணும் ராமபிரான்

தஞ்சையாளிநகர்ச்சிங்கப்பெருமாள்கோயிலின் முகப்பு வாயிலைக் (அரசகோபுரம் என்னும் கட்டை கோபுரத்தைக்) கடந்த உடனே நம் கண்ணில் முதலாகத் தென்படுவது துவஜஸ்தம்பம் என்ற கொடி மரம். அதற்குச் சற்று முன்பாக ஒரு தீபஸ்தம்பம் உள்ளது. அந்த தீப ஸ்தம்பத்தில் கிழக்கு தெற்கு வடக்கு ஆகிய திசைகளில் மட்டும் சிற்பங்கள் தென்படுகின்றன. அவற்றுள் வடக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் கோதண்டராமன் காட்சி தருகின்றார். தென்திசை நோக்கி நின்ற வண்ணம் அருள்பாலிப்பவர்

புள்ளரையன் எனப்படும் கருடாழ்வார். கிழக்கு நோக்கி அருள்பாலிப்பவர் அனுமன் அளித்த கனியை உண்ணும் ராமபிரான் ஆகலாம்.

இந்த சிற்பம் அயோத்தியர் கோமானான ராமபிரான் என அறுதியிட முடியாவண்ணம் அமர்ந்த கோலத்தில் அவரது வலக்கரத்தில் கண்ணபிரானின் கையில் காணப்படும் வெண்ணை போன்ற வடிவைப் பெற்றுள்ளது. அமர்ந்த கோலத்தில் கால்மேல் கால்போட்டுக் கொண்டு மிடுக்காய் காட்சி தரும் அவ்வெம்பெருமானின் அடியை வருடி அரும் பணி செய்யும் அனுமனின் உருவத்தைப்பார்க்கும் போது வெண்ணை உண்ணும் கண்ணன் என முடிவு செய்யவும் இயலாத சூழ்நிலை. இருப்பினும் இத் திருக்கோயிலின் அர்த்த மண்டபத்தின் வடகிழக்கு மூலையில் கால்மேல் கால் போட்டுக்கொண்டு ஒய்யாரமாய்த் தென்திசை பார்த்து இரு மருங்கிலும் அனுமன் லக்ஷ்மணன் புடைசூழ சக்கரவர்த்தித் திருமகன் அமர்ந்து அருளாசி புரிவதைக் காண முடிகிறது. விண்ணாற்றங்கரை நீலமேகப் பெருமாள் கோயிலிலும் ராமாயண சிற்பங்கள் பல காணக் கிடைக்கின்றன. நீலமேகப் பெருமாள் கோயில் கருட மண்டபத்தில் வடக்குத் துவாரத்தின் இரு பார்ச்வங்களிலும் வால்கோட்டை அனுமார், சஞ்சீவி ஆஞ்சநேயர்களைக் காண்கிறோம். அதனைக் கடந்து உள்ளே சென்றால் முக மண்டப மணிக்கதவத்தின் இருமருங்கிலும் அமையப்பெற்ற துவார பாலக கோஷ்ட்ட மேல் விதானங்களில் சுக்ரீவநட்பும், அசோகவனக் காட்சியும், சிற்பங்களாக வடிக்கப்பெற்றமை நம் கண்ணில் விழுகின்றது. திரிஜடையுடன் அசோக வனத்தில் சீதையின் இருப்பும் சிம்சுபா மரத்தின் மேல் அமர்ந்து சீதையைக் கண்டுபிடிக்கும் சுந்தரனான ஆஞ்ஜநேயனையும் கொண்ட அற்புதமான அசோகவனக்காட்சியினைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அது அவ்வளவு அழகு வாய்ந்த சிற்பமாகும். தனிக்கோயில் நாச்சியார் ஸ்ரீ செங்கமல

வல்லித்தாயார் சந்நிதியின் முகமண்டபத்தில் நுழைந்தவுடன் நமக்கு வலப்புறம் காணப்பெறும் முதல் தூணில் ராமாயணச் சிற்பங்கள் நிரம்ப உள்ளன. வாலி சுக்ரீவயுத்தம், அங்கதனை வாலி சுக்ரீவனிடம் ஒப்புவித்தல், வீர ஆஞ்சநேயர் போன்ற தூண் சிற்பங்கள் கலைத்திறங்கொண்டவை. ராமாயண ஓவியங்களை குடந்தை ராமர் கோயில் பிராகாரத்திலும், லக்ஷ்மீபுரம் என்கிற (பந்தநல்லூருக்கு அருகிலுள்ள) குறிச்சி (லக்ஷ்மீபுர மகாத்மியம், தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு - பதிப்பாசிரியர் Dr.ஆ. வீரராகவன்) ராமர் சந்நிதி முக மண்டப மேற்கூரையிலும் நாம் காணலாம். தஞ்சாவூர் கலியுக வேங்கடேசப் பெருமாள் கோயில் துவஜஸ்தம்ப மண்டப மேற்கூரையில் ராமாயணக் கதைதனைச் சிலாவடிவமாகப் பார்க்கலாம். இவை எல்லாவற்றையும் கருத்தில் கொண்டு, விண்ணாற்றங்கரையிலேயே மற்ற இடங்களில் நாம் கண்டுகொண்ட ராமபிரானையும் ஒப்பிட்டு, சிற்ப அமைதியையும் வைத்துப் பார்த்தால் சிங்கப்பெருமாள் கோயிலின் சக்கரவர்த்தித் திருமகனார் சற்று வித்தியாஸமுடையவர் என்பதும், கானகம் மேவிய அயோத்தியர் கோனைச் சந்தித்த அனுமன் அவருக்கு அருங்கனி தந்துண்ணச் செய்து அடிவருடப்பணி செய்கின்றார் என்கிற அரிய சிற்பம் அளிக்கும் அற்புதச் செய்தியும் அறிய முடிகின்றது. இவ்விதமாக வீரநரசிங்கப் பெருமாள் கோயில் தீபஸ்தம்பத்தில் அமர்ந்த கோலங்கொண்டு அருள்புரியும் எம்பெருமான் அயோத்தியர் கோமான்தான் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

### 4. 3. ஸ்ரீ சடகோபரும் ஸ்ரீ பாஷ்யகாரரும்

தஞ்சை மாமணிக் கோயிலில் ராமாயணம் போதிக்கும் சுவர்ச் சிற்பங்கள் சிலவற்றைக் குறித்து நாமிங்கே பார்த்தோம். அதையடுத்து விக்கிரஹம் என்ற வகையில் சோழர்காலப் பழமை வாய்ந்த (வலவெந்தை) லக்ஷ்மீ நரசிம்மர்களும், மிக அழகாகக்காட்சி தரும் நீலமேகமணிபர்வத வீரநரசிம்மர்களைச்

சிலாமூர்த்திகளாகவும் இத் திவ்யதேசத்தில் காணலாம். தஞ்சை மாமணிக்கோயில் நீலமேகப்பெருமாள் சந்நிதியில் காணப்பெறும் ஆண்டாள் விக்கிரஹம் ஸ்ரீ நீலமேகப் பெருமாளுடன் கருட வாஹனத்தில் அலங்காரம் செய்வதற்காகவே அமைந்த அழகான படிமமாகும். கோதையுடன் கருட வாஹன சேவை வைகாசித் திங்கள் விசாகப் பிரஹ்மோத்ஸவத்தின் நான்காம் திருநாளிலும், பன்னிரு கருடசேவைப் பெருவிழாவிலும் முறையே ஒவ்வொரு ஆண்டும் நாம் கண்டு களிக்கலாம். ஸ்ரீபராசரமுனிவர் நாரணனைக் குறித்து தவமியற்றி லக்ஷ்மீ ஸமேத கருட வாஹனனைக் கண்ணாரக் கண்ட புராணக் கதைதனை அடிப்படையாகக் கொண்டு ஸ்ரீ நீலமேகப் பெருமாளின் ராஜகோபுரத்திலும், கருடன் சந்நிதி விமானக் கீழ்த்திசை விதானத்திலும் ஸ்ரீ கருடசேவைக் காட்சியினைச் சிற்பமாகச் செதுக்கியுள்ளனர். இதை யெல்லாம் கருத்தில் கொண்டு ஆழ்வார் கோஷ்டியிலும், எம்பெருமானின் நாயகியாகவும் விளங்கும் ஆண்டாளை ஸ்ரீநீலமேகப் பெருமாளுடன் கருடவாகனத்தில் அலங்கரித்துப் பவனி வரச் செய்கின்றனர். மேலும் விண்ணாற்றங்கரை ஸ்ரீ நீலமேகப் பெருமாள் சந்நிதியில் உற்சவமூர்த்திகளாக அமைந்த ஸ்ரீ சடகோபரும், ஸ்ரீ பாஷ்யகாரரும் இங்கே சிற்ப அமைதியில் சிறப்புற்று விளங்குகின்றனர். அவ்வகைச் சிற்பச்சிறப்பினை சிறிது பார்ப்போம்.

ஸ்வாமி வேதாந்ததேசிகனுக்கு (1317 A.D.யில்) குமார வரதாசார்யர் புத்திரராய் அவதரித்தார். இவர் அவதரித்த நன்னாள் ஆவணித் திங்கள் உரோஹிணி கூடிய பொன்னாளாகும். இவருக்கு தர்க்க சாஸ்த்திரத்தில் மிகுந்த பாண்டித்யம் உண்டென்பது நிகில தார்க்கிக சூடாமணி என்ற பிருதத்தால் அறியப்படுகிறது. குமாரவரதாசார்யர், பகவத்தியான பத்ததி, ஹறிணஸந்தேசம், கோகிலசந்தேசம்,

லக்ஷ்மீ சதகம், சங்காசதகம், விக்கிரஹத்தியானம், வேதாந்த தேசிகப்பிரபத்தி, தியாகசப்தார்த்தநிர்ணயம். விரோத பஞ்ஜனீ, அதிகரண சிந்தாமணி: ஆச்ரயானுபபத்தி: சிதசதீச்வரதத்வநிரூபணம் போன்ற நூல்களை இயற்றி யுள்ளார். (செய்தி: ரகஸ்யத்ரயஸாரார்த்தஸங்கிரக ஆய்வுநூல், Dr. T. N. Aravamudan) ஸ்வாமி தேசிகனின் குமாரரான இவர் ஸ்ரீ ரங்கத்தில் பிரஹ்மதந்த்ர ஸ்வாமியுடன் ஸம்பிரதாய கிரந்தங்களைப் பிரவசனம் செய்து கொண்டிருந்தார். ஸ்வாமி தேசிகன் பரமபதித்த பிறகு வார்ஷிக கைங்கர்யங்களை யெல்லாம் முடித்தவராய் தென்தேசயாத்திரை மேற்கொண்டு திருப்பேர் நகர், கங்கைகொண்டசோழபுரம் "தஞ்சை மாமணிக்கோயில்" திருக்கோட்டியூர், திருமாலிருஞ்சோலை, மதுரை, ஆழ்வார்த்திருநகரி, ஸ்ரீ வில்லிபுத்தூர், திருநாராயணபுரம் போன்ற திவ்ய தேசங்களில் விசிஷ்ட்டாத்வைத ஸித்தாந்தத்தைப் பரவச்செய்தார். திருதீயபிரஹ்மதந்த்ர ஸ்வாமி இயற்றிய மூவாயிரப்படி குருபரம்பரையில் திருமங்கை மன்னனின் பாடலும் தஞ்சை மாமணிக் கோயிலும், நீலமேகப்பெருமாளும் ஆக மொத்தம் ஐந்து முறை இத்தஞ்சை திருத்தலம் குறிப்பிடப்பட்டுள்ளது. இனி திருதீய பிரஹ்மதந்த்ரஸ்வாமி இயற்றிய குருபரம்பரை வாக்கியத்தினைச் சிறிது பார்ப்போம்.

"எம்பிரானெந்தை என்னுடைச் சுத்தம் என்கிறபடியே திருமங்கையாழ்வார் திருஉள்ளம் குடிபுகுந்த தஞ்சை மாமணிக்கோயிலேற எழுந்தருளி அங்குள்ளே மாய வாளையும் ஜயித்து அந்த ராஜாவிடத்தில் சன்மானங்களையும் பெற்று, எழுந்தருளியிருக்கிற காலத்தில் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் திருநாட்டுக்கு எழுந்தருள அவருக்கு துவாதசாஹ கிருத்யத்தைச் செய்து நயினாராசார்யர் பிரம்மதந்த்ரஜீயர் ஸந்நிதியில் அவர் ஸம்பந்தி இருவர் வந்து தண்டன் சமர்ப்பித்து திருவத்யயனம் இல்லையே என் செய்வக்கடவ தென்று விண்ணப்பம் செய்ய நயினாபாசார்யரும் பிரம்மதந்த்ரஜீயரும் திருக்குருகைப்பிரானபிள்ளான்

நியமனப் படிக்கு நாலாயிரத் தனியன்களையும் தேசிகப் பிரபந்தங்களையும் சேவித்து பிராயச்சித்த ரூபமான திருவத்யயனத்தை முடிக்கலாம் என்று முடிவுசெய்து நாலாயிரத்தனியன் களையும், தேசிகப்பிரபந்தம், இருபத்து நாலுகளையும் பிள்ளையந்தாதியையும், தஞ்சைமாமணிக் கோயில் எம்பெருமானான நீலமேகப்பெருமாள் சந்நிதியில் முன்னம் அனுசந்தித்து (திவ்யபிரபந்த க்ருதபிஷ்டவ பத்யகாதா: வேதாந்த தேசிகக்ருதா அபி தே பிரபந்தா: । யத்ஸந்நிதௌ பிரதமஸம்படிதா மஹத்பி: தஞ்சேச்வரோஸ்து பலதோமம நீலமேக: ॥ சாக்ஷாத்ஸ்வாமி இயற்றிய திவ்யப்பிரபந்த உரை-வாத்ஸ்யஅகோபிலாசார்யர் இயற்றிய தனியன் உரையில் முதல் சுலோகம்) அவர் நியமனத்தாலே அந்த ஸ்ரீவைஷ்ணவருக்கு திருவத்யயனத்தையும் நடப்பித்து, மத்துமுள்ள திவ்யதேசங்களிலும் இப்படி அனுசந்திக்கும்படி நியமித்தருளினார்." மேலும் திருமங்கை ஆழ்வாரின் திவ்யமங்கள விக்ரஹமான உற்சவமூர்த்தியின் திருமார்பில் மாறன் சடகோபரையும், திருவடிவாரத்தில் நம் இராமானுஜரையும் காணக் குறையலூர்த் திருத்தலம் செல்ல வேண்டும் (108 வைஷ்ண திவ்யதேசங்கள், by சுடரொளி). திருவெள்ளறையில் எங்களாழ்வான் திவ்யமங்கள விக்கிரஹத்தின் திருவடிவாரத்தில் நடாதூர் அம்மாளின் திரு உருவத்தைக் காணலாம். (ஸ்ரீவைஷ்ணவம் 108 வைஷ்ணவ திவ்யதேசங்கள்) இவ்வாறு பவிஷ்யதாசார்யரைக் காட்டி கொடுக்கும் திவ்யமங்கள விக்கிரஹங்களைத் தஞ்சை மாமணிக்கோயில்தனிலும் கண்டு மகிழலாம். ஸ்வாமி தேசிகனின் திருக்குமாரர் தஞ்சைமாமணிக் கோயிலுக்கு விஜயம் செய்யும்போது "நீலமேகப் பெருமாள் சந்நிதியில் ஆழ்வார், எம்பெருமானார், தேசிகர்கள் திவ்யமங்கள விக்கிரஹங்களைத் திருப்பிரதிஷ்டை செய்து வைத்தார்கள். அந்த எம்பெருமானார் தேசிகர்கள் திவ்யமங்கள விக்கிரஹத்திலும் அலங்காராஸனத்தில் ஒரு திருமேனியாய் இருக்கும்படி ஒரு தேசிகதிவ்யமங்கள விக்கிரஹத்தையும் செய்து வைத்தார்கள்" என்று குருபரம்பரை கூறுகிறது.

அப்படியேநம்மாழ்வார்திருவடிவாரத்தில் ஸ்ரீபாஷ்யகாரரையும் சேவிக்க முடிகின்றது. ஆசார்யர்கள் உகந்தருளும் விதமாக வடகலை சம்பிரதாயத்துக்குத் தலைவராயுள்ள ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் குமாரரும் சிஷ்யருமாகிய நைனாராசார்யரும், இவர் சிஷ்யரான பிரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமியும் சிஷ்யர்களோடு வெகுகாலம் இந்த தலத்திலே வசித்து வருகையில் ஸ்ரீதேசிகனை முதன்முதலாய் விக்கிரஹப் பிரதிஷ்ட்டை செய்துவைத்து, ஸித்தாந்தஸ்தாபனம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்கள். 45ஆம் பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர், 'ஸ்ரீபாஷ்யகாரரின் திருவடிகளை வணங்கித்தொழுதால் ஆய்ந்த பெரும்சீரார் சடகோபன் செந்தமிழ் வேதமாம் திருவாய்மொழியில் பேராத உள்ளம் பெறலாம்' என்பதையும், 'ராமாயணம்' சொல்லப்படும் இடங்கள் தோறும் சிறிய திருவடி எழுந்தருளியிருப்பது போல எம்பெருமானாரும் திருவாய்மொழி இன்னிசை மன்னுமிடந் தொறும் இருப்பாராம். மேலும் எம்பெருமானுக்குச் சடாரி போல் நம்மாழ்வாருக்கு இவரே திருவடி நிலைகளாக நிற்கிறார். நம்மாழ்வார் ஸந்நிதிகளில் ஸ்ரீ சடகோபருடைய ஸ்தானத்தில் நிற்பது இராமானுஜரே என்பதை ஸ்வாமிதேசிகனின் திருக்குமாரரான நயினாராசார்ய ஸ்வாமியும், "தொல்லருள் மாறன் துணையடிக்கீழ் வாழ்வையுகக்கும் இராமானுசன்" என்று நம்மாழ்வாரை இட்டேதான் நம் இராமானுசனைக் குறிக்கிறார் என இதத்தாய் இராமானுசனில் (எனும் ஸ்ரீந்ருஸிம்மப்பிரியா கட்டுரையில்)சாதித்துள்ளார்.

தஞ்சை மாமணிக்கோயில் நீலமேகப்பெருமாள் சந்நிதியில் நம்மாழ்வார் திருவடியில் இராமானுசரையும் இராமானுசர் திருவடியில் ஸ்வாமி தேசிகனையும் காணமுடிகின்றது. இதையெல்லாம் கருத்தில் கொண்ட குமாரவரதாசார்யர், "தொல்லருள் மாறன் துணையடிக்கீழ் வாழ்வையுகக்கும் இராமானுச முனிவண்மை போற்றும்

சீர்மையன் எங்கள் தூப்புல் பிள்ளைபாதம் என் சென்னியதே" என்று மேற்கூறிய இரண்டு திவ்யமங்கள விக்கிரஹச் சிறப்பினையும் ஒரே தமது பிள்ளை அந்தாதிப்பாட்டில் அமைத்து ராமானுசரின் திருவடி நிலைகளாக நிற்பவர் ஸ்வாமி தேசிகன் என்று இராமானுசரை இட்டே ஸ்வாமி தேசிகனைக் குறிக்கிறார் எனத் தோன்றுகிறது. நிற்க ! பிரபன்னாம்ருதம் 116 ஆம் அத்யாயத்தில் நம்மாழ்வாருக்குப் பின் வருங்கால ஆசார்யன் இராமனுசரே என்றறுதியிட்டுக் கூற மற்றுமொருசான்று கிடைக்கின்றது.

ஸ்ரீரங்கபுர்யாம் ச்ரிதசிஷ்ய ஸங்க:
ஸ்ரீயாமுனார்ய: ப்ரதித ப்ரபாவ:।
அவ்யாஹதம் விஷ்ணு மதம் ஜகத்யாம்
ப்ரவர்த்தயாமாஸஜிதாரிவர்க: ॥

ஸஹஸ்ரகீதிம் சிஷ்யேப்ய: யாமுனார்ய: ப்ரபோதயன்।
ஸர்வதா மானயம்ஸ்தஸ்தெளசடாரேர் திவ்ய வைபவம்॥
ஸஹஸ்ரகீத்யாம் வேதாந்தின் கதாசித் புத ஸத்தம:।
பொலிஹேத்யஸ்ய பத்யஸ்ய வ்யாக்யான ஸமயே ததா॥
லோகைக தேசிக ஸ்ரீமான் மம காலாதனந்தரம்।
இதி ஸஞ்சிந்தயன் நித்யம் பொலிஹார்த்தம் ச ஸாதரம் ॥
தம் ஹாரீதஸ்ம்ருதாவர்த்தம் ஸ்ம்ருத்வா பூயோ மஹத்தரம்।
யாதவாசலமாஹாத்ம்யே சுலோகார்த்தம் சாகிலம் சதம்॥
த்ருவம் கச்சின் மஹாசீக்ரம் பூம்யாமவதரிஷ்யதி।
ஸ மஹான் மம காலே வா பவிதா மதநந்தரம் ॥
இதி ஸஞ்சிந்த்தயன்னாஸ்தே ரங்கே யாமுனதேசிக:।

(பிரபன்னாம்ருதம் 116 ஆம் அத்யாயம்)

என்கிறபடியே ஆளவந்தார் ஸ்ரீரங்கத்தில் பகவத்விஷயம் காலக்ஷேபம் சாதித்து வருகையில் "பொலிக ! பொலிக ! போயிற்று வல்லுயிர்ச்சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்றுமில்லை கலியும் கெடும் கண்டுகொள்மின் (திருவாய்மொழி-5:2:1) என்ற பாசுரத்திற்கு விளக்கமாக ஜயிக்கவல்ல ஒரு மகான் நம் ஸம்பிரதாயப் பிரவர்த்தகராய் அவதரிக்க உள்ளார். அப்போது நமனுக்கு

இங்கு யாதொன்றுமிருக்காது என்றவாறவதரிக்கவிருக்கும் மகானையே நினைத்தவண்ணமாய், ஹாரீதஸ்ம்ருதி, யாதவாசலமாகாத்மியம் கூறும் செய்திகளையும் அடிப்படை யாகக்கொண்டு பவிஷ்யத் ஆசார்யர் ஸ்ரீராமானுசரின் அவதாரத்தை அருளிச்செய்வாராம். அவ்வாறே இராமானுசருக்குப்பின் அவரது சித்தாந்தம் தழைத்தோங்கச் செய்த பெருமையை உடையவர் அல்லவா ஸ்வாமிதேசிகன். எம்பெருமானின் திருவடி சடகோபர் போலே ராமானுசரின் திருவடி ஸ்வாமிதேசிகனே என்ற கருத்தினையும், நம்மாழ்வாரின் திருவடி இராமானுசரே என்ற கொள்கையினையும் பின்னவரும் அறியவகைசெய்யும் மூர்த்தங்களைக் காண விண்ணாற்றங்கரைக்கு இன்றே செல்வோம். வேதாந்தாசார்யர்களை இனிதே வணங்கி மகிழ்வோம்.

### 5. தஞ்சைமாமணிக்கோயில்களில் ஆகமம்

தஞ்சாவூரிலுள்ள வைணவக் கோயில்களில் ஸ்ரீவைகானஸ ஆகம முறைப்படி பூசைகள் நடந்து வருகின்றன. ஸ்ரீ வைகானஸ ஆகம முறையினை தஞ்சை ஆலயங்களில் ஏற்படுத்தியவர்-

*பராசரோர்ச்சயாமாஸ ச்ரியாஸார்தம் ஜகத்பதிம்।*
*நீலமேகம் பிரதிஷ்ட்டாப்ய வைகானஸவிதானத:॥*
*அர்ச்சயன்நீலமேகாக்யம் ந்ருஸிம்மம் விஷ்ணுமவ்யயம்।*
*ஸ்வாரோசிஷ மனோ:காலே சதுஸ்த்ரிம்சத்யுகேக்ருதே॥*
*நீலமேகம் பிரதிஷ்ட்டாப்ய ந்ருஸிம்மம் சததார்ச்சயத்॥*

(தஞ்சைத் திருக்கோயில்கள் P.No.31&B.No. 1866/D.No. 10357, P.No.8a பராசரக்ஷேத்திரமாகாத்மியம், T. M. S. S. Library, Thanjavur)

என்கிறபடியே ஸ்ரீ பராசரமுனிவர் ஆவார். மேலும் "இவ்வூர் வைகானஸன் காச்யபன் ஸ்ரீவாசுதேவன் ஆராவமுதன்" என்றும், ஸ்ரீவைகானஸ சூத்திரத்து கௌதமன் கோவிந்தன் சிங்கபிரான் (SII. V. 5 & தஞ்சை திருக்கோயில்கள் P.No. 56/1409/ 1st Rajaraja) என்றும், தஞ்சைமாமணி கௌதம கோத்திரத்து ஸ்ரீவைகானஸ சூத்திரத்து புராணபட்டர் புத்ரன்

"உலகுய்யநின்ற பெருமாள்" என்றும், காச்யபகோத்திரத்து வைகானஸ சூத்திரத்து கோவிந்தபட்டர் நீலமேகர் புத்ரன் (SII. V. 5 & தஞ்சை திருக்கோயில்கள் P.No. 83/1403/ Achyutappanayaka) என்றும் நான்கு இடங்களில் ஸ்ரீவைகானஸர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளனர். மேற்கூறியதான தஞ்சை ஸ்ரீராஜகோபாலப் பெருமாள் மூலஸ்தானத்தின் மேற்புறச் சுவற்றில் காணக்கிடைக்கும் கல்வெட்டில் தஞ்சை மாமணி, கரந்தை வசிஷ்டேச்வரர் கோயில் கல்வெட்டில் இவ்வூர், என்றும் இருசொற்கள் உள்ளன. இவ்விரு சொற்களை ஆராயும்போது இவை ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சுட்டுவது புலனாகிறது. தஞ்சை மாமணி எனக் குறிப்பு தரும் கல்வெட்டின் காலம் சகம் 1461 (+78=1539 A.D.) ஆகும். தஞ்சை மாமணிக்கோயிற்பகுதியை "காடவன்மாதேவி சதுர்வேதிமங்கலம்" என்றுகுறிக்கப் பட்டுள்ள கோனேரிமை கொண்டான் கல்வெட்டில் (SII Vol-223 P.No. 118) சக ஆண்டு 1377 (+78=1455 A.D.)ல் தஞ்சை மாமணி, கண்டங்குரை, நாகளாபுரம், வெலங்குடி, அம்மை அப்புரம், தென்அளூர், கருப்பூர், மருவூர், இராசேந்திர சோழநல்லூர், சுங்கம் தவிரத்த சோழநல்லூரான திருமலை ராசபுரம் போன்ற அக்ரஹாரக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவ்விரண்டு கல்வெட்டு களையும், அவற்றின் காலத் தினையும் கணக்கில் கொண்டு பார்க்கும்போது ஸ்ரீவைகானஸ சூத்திரத்தின் வழிவந்தவர்களாகக்குறிப்பிட்ட அவர்கள் தஞ்சைமாமணி என்னும் அக்கிரஹாரத்து வாசிகளும் தஞ்சைமாமணி கோயில் முன்னர் அமைந்த இடம் தஞ்சைமாமணி அக்கிரஹாரமும் ஆகலாம். இதனால் தஞ்சையிலிருந்து வடக்கே செல்லும் குடந்தைச் சாலையில் பள்ளியக்கிரஹாரம் கடந்த பின்னே வரப்பெறுகின்ற தண்டாங்கோரை கண்டங்குரையின் அடிப்படையில் தோன்றியிருக்கலாம். "தண்டங்குரை தண்டலை ஆலங்காடு" என்னும் தேவாரவாசகத்தில் (இவ்வக்கிரஹாரத்திலுள்ள) இத்திருத்தலம் வைப்புத்தலமாக போற்றப்பட்டுள்ளது. (செய்தி: ஊரும் பேரும், ரா.பி.சேதுப்பிள்ளை, ப. எண். 359)

## 6. ஆலயம்

பராசரக்ஷேத்திரம் என்றழைக்கப்பெறும் விண்ணாற்றங் கரையில் வைஷ்ணவ சமயத்தைச் சார்ந்த திருக்கோயில்களும், சைவசமயத்தைப் பின்பற்றி அமைந்த ஆலயங்களும் காணப்படுகின்றன. அவற்றை முறையே வைஷ்ணவம், சைவம் என்ற வகையில் அறிந்து மகிழ்வோம்.

### 6. 1. விண்ணாற்றங்கரையின் விஷ்ணு ஆலயங்கள்

ஸ்ரீநிலமேகப்பெருமாள் ஆலயம், ஸ்ரீமணிகுன்றப் பெருமாள் ஆலயம், ஸ்ரீவீரநரசிங்கப்பெருமாள் ஆலயம் ஆகிய முப்பெருங்கோயில்கள் ஆழ்வார்களால் பாடல் பெற்ற திருத்தலங்களாக விளங்குகின்றன. இவை மூன்றினைத் தவிர இன்னும் பழம்பெருங்கோயில்களாகத் திகழ்பவை ஸ்ரீவரதராஜப்பெருமாள், ஸ்ரீகல்யாண வேங்கடேசர் ஆலயங்களாகும். வராஹக்ஷேத்ரம் எனப்படும் ஸ்ரீநீலமேகப் பெருமாள் கோயிலின் அருகே சாலையை ஒட்டினார்ப்போல் வரதராஜப்பெருமாள் ஆலயம் அமைந்துள்ளது. அப்படியே சாலைக்கு வடப்புறம் கல்யாண வேங்கடேசர் கோயில் கொண்டுள்ளார்.

### ஸ்ரீ வரதராஜபெருமாள் ஆலயம்

ஸ்ரீ வரதராஜர் திருக்கோயில் தஞ்சாவூர் - திருவையாற்றுப் பெருவழிக்கு தெற்கே நீலமேகப்பெருமாள் கல்யாணவேங்கடேசப்பெருமாள் கோயில்களுக்கு இடையே அமைந்துள்ளது. விண்ணாற்றங்கரை வேலூர் என்ற பெயரில் தஞ்சாவூர் உள்வட்டத்திலுள்ளதால் (தஞ்சாவூர் மாவட்ட அரசிதழ், ப. எண். 9/வ.எண். 86/கிராம எண் 51/கிராமம்: வேலூர்/20.4.2001) இன்றளவாக இந்த எம்பெருமான் வேலூர் வரதராஜன் என்றே அழைக்கப்படுகிறார். இப்பகுதியிலுள்ள சில இடங்கள் வேளூர் மாவனப்பத்து -102, வேளூர் -102/1, வேளூர்-102/2, வேளூர் கோவிந்தராஜ் தோட்டம்-102/3, வேளூர் பாசனத்தோட்டம் - 102/7, வேளூர் ஆனந்தவல்லித் தோட்டம்-102/11 என்றவாறு அமைந்துள்ளமையை 'தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்' (T.M.S.S.M. Library, Thanjavur, T. 7615)

என்ற நூல் தெரிவிக்கின்றது. விண்ணாற்றங்கரைத் திவ்யதேசத்தில் நல்லோர்களைக் காக்கவும், தீயோர்களை ஒடுக்கவும் எண்ணங்கொண்ட திருமால் வரம்தரும் வாமனனாக, கஜேந்திர வரதனாகக் காட்சியளித்தமை குறித்து அறிந்திருக்கிறோம். அந்த கஜேந்திர வரதனாம் அத்திகிரி வரதன் திருமகள், மண்மகள் ஆன தேவியரும் தன்னுடனே திகழ்ந்தவனாய் இந்த விண்ணாற்றங்கரையில் சேவை சாதிக்கின்றார்.

அத்திகிரி அருளாளப்பெருமாள் வந்தார்
ஆனைபரிதேரின்மேல் அழகர்வந்தார்
கச்சிதனில் கண்கொடுக்கும்பெருமாள் வந்தார்
கருதவரம்தரும் தெய்வப்பெருமாள் வந்தார்।
முத்திமழைபொழியும் முகில்வண்ணர்வந்தார்
மூலமெனஓலமிடவல்லார்வந்தார்
உத்தரவீதிக்குள்ளே உதித்தார் வந்தார்
உம்பர்தொழும்கழலுடையார்வந்தார்தாமே॥

(திருச்சின்னமாலை)

என்கிற ஸ்வாமிதேசிகனின் ஸ்ரீசூக்தியை நினைக்கலாம்படி ஆனை 'ஆதிமூலமே' என்று ஓலமிட அதனுக்கு அருள் செய்யும் முகமாய்க் கருதவரம் தரும் தெய்வப்பெருமாள் வரதாபயஹஸ்தனாகவே காட்சி தருகின்றார்.

**ஸ்ரீ கல்யாணவேங்கடேசர் திருக்கோயில்**

தஞ்சாவூர் திருவையாற்றுப் பெருவழிக்கு வடக்கே சந்தியா மண்டபத்தின் அண்மையில் லக்ஷ்மண நாயக்கர் அக்கிரஹாரத்தில் (ஸ்வஸ்திஸ்ரீ ந்ருபசாலிவாஹன சகே 1779 (+78=1857 கி. பி.) பிங்களஸம்வத்ஸர மார்கசீர்ஷ சுத்த 12 ஸ்திர ஸ்ரீரிகுஜரஸூப்பராய மேஹானாசி ஸ்திர ஜய குபேரபாஇ ஸந்த்யாமண்டப லக்ஷ்மணநாஇகா சேஅக்ரஹாராந்த வெங்கட...இடம்: ஜோகர்பாய் கல்யாணமண்டபக் கல்வெட்டு, விண்ணாற்றங்கரை & லக்ஷ்மிநாயக்கர் அக்கிரஹாரம்-102/2 'தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்' T.M.S.S.M. Library, Thanjavur, T. 7615) அமைந்துள்ளது. இக்கோயில் குறித்த கல்வெட்டு சிங்கப்பெருமாள் கோயிலின் அருகாமையில் தார் சாலையை

ஒட்டியே அமைந்துள்ள மணிக்குன்றப் பெருமாள் சந்நிதியில் முகமண்டபப் படிக்கட்டு கைப்பிடிச்சுவரின் வலப்பகுதியில் காணக்கிடைக்கிறது. கல்வெட்டு ஸ்ரீதஞ்சாவூர் அறமணை தேவஸ்தானங்களின் ஆதீனஸ்தரான மாதுஸ்ரீ காமாக்ஷியம்பாபாய் ஸாகேப் அவர்களுடைய ஆஜ்ஞையின் பேறில் ஏஜண்டு ஸ்ரீநாகறாஜ றாமாஜி பண்டிதர் அவர்களால் இந்த ஸ்ரீ மணிக்குன்றப் பெருமாள் கோவிலில் நூதனமாகக் கட்டைகோபுறம் கதவுள்படவும் மதள் செவர் பிறாகாறம் தளவரிசை பலிபீடம் கருடன் கோயில் இதுகளை ஸ்தாபித்து 1892ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 9ம் தேதி புதன்கிழமை தனுர்லக்ணத்தில் மேற்படி ஆழ்வார்களுக்கு பிரதிஷ்டையும் செய்யப்பட்டுமிருப்பதுடன் ஸ்ரீகல்யாணவேங்கடேச பெருமா(ள்) கோவில் வடபிறம் மதிள்பிறாகாறம் தளவரிசையும் புதிதாய்செய்யப்பட்டுமிருக்கிறது. (தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள், எண் . P. No. 104). தஞ்சக வதத்திற்கு பிறகு எம்பெருமான் கேழலுருவாய் ஓடி அண்மையிலுள்ள நீலமேகப்பெருமாள் சந்நிதியிலே வலவெந்தை ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மருக்கு அருகில் நின்ற திருக்கோலத்தில் காட்சி நல்குகின்றார்.

வரகூரிலோ எம்பெருமானைக் காணவிழைகின்ற ஸ்ரீகிருஷ்ணலீலா தரங்கிணீ பாடிய ஸ்ரீநாராயணதீர்த்தருக்கு பெருமாள் வராஹ உருவெடுத்து தன்னைப் பின்தொடரச் செய்து ஸ்ரீவேங்கடேசராக காட்சி தந்தார். அங்கு 'ஸாதுபரித்ராண' கொள்ளலாம். வராஹ க்ஷேத்திரமான நீலமேகப்பெருமாள் சந்நிதியிலே வராஹப்பெருமாள் தண்டகன் தன்னைக் கண்டு பயந்து ஓடும் நிலையில் வராஹாவதாரம் ஏடுக்கின்றார். இங்கு 'துஷ்க்ருதாம் விநாசத்வம்' அறியப்படுகிறது. இதனால்-பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் । தர்மஸம்ஸ்த்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥ என்கிற பதவத்கீதையின் சுலோகப்பொருள் உணரப்படுகிறது. இவ்விதமாக வரகூர் வேங்கடேசப் பெருமாளை இங்கே நினைத்தும் நீலமேகன் நரசிங்கமதாகி வராஹப்பெருமாளாய்

காட்சி தரும் நிலையில் அருகில் கல்யாணவேங்கடேசரையும் காண்கின்றபோதும் வரகூருக்குள்ள பெருமையைத் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது. இத்திருக்கோயில் என்பது குறிப்பிடத்தக்க ஒன்று. ஸ்ரீகல்யாணவேங்கடேசர் திருக்கோயில் மொட்டைராஜகோபுரம், நான்குபுறமதிள் சுவர்கள் திருச்சுற்று ஆகியவற்றுடன் காட்சியளிக்கின்றது. எம்பெருமான் கிழக்கு நோக்கிய திருமுகமண்டலத்துடன் உபயநாச்சியார் சமேதராய்க் காட்சி தருகிறார். இக்கோயிலின் முகமண்டபத்தில் வரப்பிரசாதியாக விளங்கும் அழகிய சிறு ஆஞ்ஜநேயரை நாம் கண்டு வணங்கலாம்.

### 6. 2. விண்ணாற்றங்கரையின் சிவ ஆலயங்கள்

தஞ்சை விண்ணாற்றங்கரையில் ஸ்ரீதஞ்சபுரீச்வரர் ஆலயம் சிங்கப்பெருமாள் கோயிலுக்கு சற்று தென்கிழக்கில் மேற்கு பார்த்த கோயிலாக அமைந்திருக்கின்றது.

பராசரமுனிவர் சிவபெருமானைத் துதித்தார். சிவபெருமானின் அருளால் ஆனந்தவல்லி அம்பிகையின் தோற்றமும் நிகழ்ந்து, ஆனந்தவல்லி அம்பிகையும் தனது சக்தியை ஏகவீரா, ஜயந்தி, மர்தினி, சண்டகாதினி ஆகிய நால்வராய்த் தோன்றச்செய்து அசுரர் படைகளை ஒடுக்க அனுப்பி வைத்தாள். போரில் தண்டகன், வீரன், வஞ்சகன் ஆகியோர் மாண்டுவிட, சினமுற்ற தஞ்சகன் பற்பல ஆயுதங் களுடன் சிம்மபுலிகளின் வலிமையோடு காற்று வேகத்தில் போர்க்களம் புகுந்து, சண்டக்கனிதேவியை போரிட அழைத்தான். சண்டிகையும் 8 கைகளில் படைக்கலன்களோடு தஞ்சகனுடன் போரிட்டாள். தஞ்சகன் ஆக்னேயாஸ்த்திரம் பிரயோகிக்க சண்டிகாதேவி வருணாஸ்திரம்விட்டு முறியடித்தாள். இவ்வாறு ஸம்மோஹனம், வாருணம், அம்பிகையும் பொழிந்துதள்ள, போரினால் இருவருக்கும் உடம்பில் ரணகாயங்கள் ஏற்பட்டன. போரினைக் கண்டு திசையே நடுங்கியது. அத்தருணம் வான்வழிச்செய்தி கேட்கிறது. செய்தியைச் செவிமடுத்த சண்டகாதினி, எருமை மாட்டின் கொம்புகளால் தஞ்சகாசுரனைத் தாக்கி அசுரனை

மூர்ச்சையடையவும் செய்துவிடுகிறாள். தஞ்சகாசுரனுக்கு இறுதிநிலை நெருங்கிவிடுகிறது. சண்டகாதினி அம்பிகையும் தஞ்சகனிடம் "உன் கடைசி விருப்பம் என்னவென்பதைக்கூறு, நிறைவேற்றி வைக்கிறேன்" என்று கேட்க, அசுரனும், "அம்பிகையே ! இருவருமே போரில் கோடி விரணம் அடைந்துள்ளோம். ஆதலால் நீ கோடிவிரண (கோடிவன)முடையாள் என்ற பெயரில் இவ்வூரில் கோயில் கொண்டு அருள்பாலிக்க வேண்டும். இத்தலத்தின் இறைவனும், இத்தலமும் முறையே தஞ்சபுரீச்வரர், தஞ்சபுரி எனப்பெயர் கொண்டு தஞ்சகனான என்பெயராலேயே சிறந்து விளங்கவேண்டும். இதுவே யான் வேண்டும் இறுதிவரம்" என மொழிந்தான். சண்டகாதினி ஆகிய சக்திதேவியும் தஞ்சகனின் விருப்பத்தை ஆனந்தவல்லி அம்பிகை உடனுறை சிவபெருமானிடம் தெரிவித்து அவனது ஆசையையும் நிறைவேற்றி, மோக்ஷம் அடையச்செய்தாள். அவ்வகையில் தஞ்சை விண்ணாற்றங்கரைப் பகுதியில் கோடியம்மன், தஞ்சபுரீசர் ஆலயங்களை இன்றைக்கும் நாம் கண்டு மகிழ்கிறோம்.

இது தவிர இன்னும் சிலசிவன் கோயில்கள் இங்கே உள்ளன. விண்ணாற்றங்கரை இராஜாசத்திரத்தில் ஸ்ரீ சொக்கநாதர்கோயிலும், தஞ்சை நகராண்மை கழகத்தார் தண்ணீர் பம்பிங் நிலையத்திற்கு மேல்புரம் சந்தியா மண்டபம் ஸ்ரீசுந்தரேஸ்வரர் கோயிலும் உள்ளன. ஸ்ரீகாசிவிஸ்வநாதசுவாமி கோயில் என்றதொரு சந்நிதி தஞ்சை விண்ணாற்றங்கரையில் திருவையாற்றுமார்க்கம் விண்ணாற்று பாலத்தின் தெற்கு மூலையில் திரும்பும் வழியில் அமைந்துள்ளது. இது தஞ்சை வெங்கடராயர் அவர்களால் எடுப்பித்து தற்போது அவர்கள் சந்ததியில் திரு. த. ஆ. இராமச்சந்திரராயரவர்கள் பரிபாலனத்தில் இருந்து வருகிறது. ஸ்ரீகைலாசநாத சுவாமிகோயில் ஸ்ரீமாரியம்மன் திருக்குளத்திற்குத் தென்பாரிசத்திலுள்ளது. இக்கோயில் ஏற்கனவே களிமேட்டில் இருந்தும், பிறகு

விண்ணாற்றங்கரை இராஜாசத்திரத்திற்கு எதிரில் இருந்தும், அதன் பிறகு புன்னைநல்லூர் ஸ்ரீமாரியம்மன் கோயில் திருக்குளத்திற்குத் தென்புரத்தில் கட்டி ஸ்தாபனம் செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. (தஞ்சைத் திருக்கோயில்கள், JMS.P. No.45, 46,62) இப்படியாகத் தஞ்சை மாமணிக்கோயில் எனப்படும் விண்ணாற்றங்கரைப் பகுதி சிறிதாயினும் 10 திருக்கோயில்கள் அடங்கிய குறுமாமணி நகரமாகத் திகழ்கின்றது.

முடிவுரை

பராசரக்ஷேத்திரம்-ஓர்ஆய்வு எனப்படும் இப்பிற்சேர்க்கைப் பகுதியில் புராணம், இலக்கியம், வரலாறு, சிற்பம், ஆகமம், ஆலயம் போன்ற சான்றுகளின் அடிப்படையில் விண்ணாற்றங்கரை வைஷ்ணவ சைவாலயங்களின் பெருமைகள் விரிவாக விவரிக்கப் பெற்றுள்ளன.

ஆஸ்திகர்களும், அன்பர்களும் இந்நூலை வாங்கிப் படித்து பயனடையுமாறு பிரார்த்தித்துக் கொள்கிறேன்.



